உ

ஸ்ரீசற்குருவேநம.

# சத்தப்பிரகரணம்.

இந்நூல்
சேஷகிரிசுவாமிகள்
மன்னார்பாகவதரிவர்கள்
மரபிற்செய்யப்பட்டது.

இஃது
திருத்துருத்தி, கரபாத்திரசுவாமிகள்
பரம்பரைக்குரிய-நாகப்பட்டணம்
**அருணாசலசுவாமிகளால்**
பரிசோதித்த பிரதிக்கிணங்க
காரிநாடை
**இலட்சுமணமுதலியாரால்**
சிந்தாத்திரிப்பேட்டை
**நாராயணசுவாமிமுதலியா**
ரவர்களது
பிரபாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.





ஓம்

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சற்குருதேவநமா.



# சத்தப்பிரகரணம்.



## குருஸ்துதி.

బ్రహ్మానందం పరమసుఖదం । కేవలంజ్ఞానమూర్తిం
విశ్వాతీతంగగనసదృశంతత్త్వమస్యాదిలక్ష్యం ఏకంని
త్యంవిమలమచలంసర్వ దాసాక్షిభూతం భావాతీతం త్రి
గుణరహితంసద్గురుంతంనమామి। ॥౧॥

(இதனதுபொருள்.)

பிரமாநந்தஸ்வரூபமாகியுஞ், சிரேஷ்டமான சுக
த்தைக்கொடுப்பதாகியும், நிர்விகாரமாகியும், ஞான
வடிவமாகியும், பிரபஞ்சாதீதமாகியும், ஆகாசத்து
க்குச்சமானமாகியும், மஹாவாக்கியங்களுக்கு லக்ஷி
யார்த்தமாகியும், ஒன்றாகியும், நித்தியமாகியும், நிர்
மலமாகியும், அசைவற்றதாகியும், எப்போதுஞ் சு

க்ஷிமாத்திரமாகியும், பாவனைகளுக் கப்பாற்பட்டதா
கியும், முக்குணங்களு மில்லாததாகியு மிருக்கின்ற
சற்குருவை நமஸ்காரம்பண்ணுகிறேன்.

(இ-துவுமது.)

మూకాంబికాకటాక్షాన్మోహాద్విహీనంరోత్థిశిష్యంయః
ఏకాత్మకంశేషగిరీశమశేషవేదాంతదేశికంవందే ॥௨॥

(இதனது பொருள்.)

மூகாம்பாளது கடாக்ஷத்தினாலே சீடனை மோகத்
தினின்றும் விடுவித்தவராகியும், ஏகஸ்வரூபராகியுஞ்
சமஸ்தமான உபநிடதங்களுக் காசிரியராகியுமிருக்
கின்ற சேஷகிரீசனென்னு நாமதேயத்தை யுடைய
வாசாரியனை நமஸ்காரம்பண்ணுகிறேன்.

சத்தப்பிரகரணம் - அவையாவன.

தனது நித்தியானந்த சுயம்பிரகாசத்தினின்று மோர
றிவு சங்கற்பரூபமாகத் தோன்றிப் பகிர்முகமான
விடத்துண்டான அறிவறியாமையே பிரகிருதிமகத
த்துவமெனவும் அவற்றினின்றும் விகற்பித்தெழாநி
ன்ற அறிவினறிவறியாமையே மாயையவித்தையெ
னவும், அவற்றிற் பிரதிபலித்த ஜீவேஸ்வர சங்கற்ப
விகற்பமே ஞானமுதலியவிருபத்தைந்துதத்துவங்
களெனவும், அவற்றினின்றுஞ் சங்கற்பரூபமாகப்ப
ரிணமித்ததே பாஞ்சபூதபவுதிகமெனவும் அவற்றை

ச்சங்கற்பவிகற்பரூபமானசித்தவிருத்தியால்வருகிற
ராகத்துவேஷங்களா லனுபவிக்குஞ் சுகதுக்கங்களை
விடயமெனவுந் தோற்றிய (அத்தியாரோபத்தை)
அபவாதத்தான் முன்னுண்டான முறைமைப்படி
யடக்கித் தனதுநிசானந்தத்தை வெளிப்படுத்துநிமி
த்தம் அருளேதிருமேனியாக வெழுந்தருளிய சே
ஷாத்திரிசிவனுமொன்னு ஞானாசாரியர் சங்கற்பவிகற்
பத்தினல் விருப்புவெறுப்புண்டாய் அதனால் விடய
ங்களிற் சுழலாநின்ற சித்தத்தின்விருத்தியைக் கெடு
த்ததற்குச் சுத்தியுண்டாகும்பொருட் டவ்விருப்பு
வெறுப்பை ராகத்துவேஷப் பிரகரணமெனவும்,
அச்சித்தசுத்தியுண்டானவிடத்து இதார்த்தத்தைக்கா
ண்பதற்கேதுவாகத் தோற்றினகுறியைத் தெரிவித்
தற்பொருட் டதனைச் சாதன சதுஷ்டயப்பிரகரண
மெனவும், அவையுதித்தவிடத்து பஞ்சபூத பவுதிக
முதலியவனைத்துஞ் சடமெனத் தெரிவித்தற்பொரு
ட் டவற்றைத் தூலப்பிரகரணமெனவும், அவைகள்
சடமானவிடத் தவைகளை மேற் சித்தைக்கொண்ட
சைப்பிக்கு மந்தக்கரணங்களைச் சடமென் றறிந்த
வைகளை நீக்குதற்பொருட் டவற்றைச் சூக்குமப்பிர
கரணமெனவும், அவைகளடங்கினவிடத் தவைகட்
குக் காரணமான மாயையவித்தையை யாரோபித
மென் றறிந்தகற்றும்பொருட் டவற்றைக்காரணப்பி

ரகரணமெனவும், அவைகணீங்கினவிடத் தெதிரிட்
ட ஷீவேஸ்வரர்களை மறைத்த மகதத்துவம் பிரகிரு
திகளைச் சிற்பிரகாசமாக நீக்குதற்பொருட் டவைக
ளை மகாகாரணப்பிரகரணமெனவும், இவைகளனைத்
துந் தற்பிரகாசமாக நீங்கினவிடத்துத் தனதுசுயம்
பிரகாசமாகவிளங்காநின்ற நித்தியானந்தமேதமது
ஸ்வரூபமெனத் தெரிவிக்கும்பொருட் டதனை நிசா
னந்தானு பூதிப்பிரகரணமெனவும் பகுத்துக்கூறி
ய வேழுபிரகரணங்களாம். இங்ஙன முறையாகக்கூ
றத்தொடங்கிய இப்பிரகரணங்களுண் முந்தின பிர
கரணத்தில் ராகத்துவேஷாதிகளின் ஸ்வரூபத்தை
நிரூபிக்கிறார்.

(சுலோகம்.)

కామాద్యాష్షడ్గుణా హేయోపాదేయతాంగతాః
తేషాంస్వరూపం ప్రథమం తావత్త్ర నిరూప్యతే | 3 |

(இதனதுபொருள்.)

காமமுதற் பதினாறுகுணங்களில் - ராகமுதற்பதி
ன்மூன்றுந்தள்ளத்தக்கனவும் - இச்சைமுதன் மூன்
றுங்கொள்ளத்தக்கனவுமாம். அவைகளின் ஸ்வரூப
ம் நிரூபிக்கப்படுகின்றது. ராகத்தினம்சமேகாமமா
தலாற் காமாதியெனக்கூறினார். இப்பதின்மூன்றும்
ராகத்துவேஷங்களின் பரியாயமெனக்கொள்க.

எந்தராகத்துவேஷங்களினாற் றிரிவிதகரணங்களு
ந் திரிவிதகன்மங்களைச் செய்கின்றதோ வந்த ராகத்
துவேஷங்களின்குணங்களை நிரூபிக்கிறோம். (அவை
யாவன) ராகம்- துவேஷம்-காமம்-குரோதம்-லோ
பம்-மோகம்-மதம்-மச்சரம்- ஈரிஷை-அசூயை-டம்
பம்-தர்ப்பம் - அகங்காரம்- எனப் பதின்மூன்றாம்.
இப்பதின்மூன்று மோக்ஷமடைதற்கு விக்கினமா
யிருக்கின்றபடியா லிவற்றை முமுக்ஷுவானவர்கள்
காலத்திரயங்களிலும் பரிசியாமற் சர்வாத்மனா விட்
டுவிடவேண்டியது சித்தம். (இவைகளின் விபரம்.)
பரஸ்திரீகமனம்பண்ணவேண்டுமென்று விகற்பித்
துவருகிற சித்தவிருத்திக்குராகமென்றுபேர். இதை
முமுக்ஷுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற்
சர்வாத்மனாவிட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்
டியதென்றால்-பூர்வத்தி லிராவணன் பரதாரமான
சீதையம்மனை யிச்சித்த ராகத்தினா லவன் பிராண
ஹானி பந்துநாச மிராச்சிய ஹானி யிகபரங்களி
லபகீர்த்தி யிவைமுதலான வநேக வநர்த்தங்கள் அனு
பவித்ததும் இன்னுஞ் சகோதரரான சுந்தோபசுந்
தா ளிருவருந் திலோத்தமையைக்கண்டு உன்பாரி
யென்பாரியென் றடித்துக்கொண் டிறந்ததும் இன்
னுமநேகம்பேர் இந்தராகத்தினாற் றுக்கமனுபவித்த
துஞ் சாத்திரங்களிற்கண்டிருக்கிறோ மானபடியினா

லும் இப்போதிருக்கிறபேர்களு மிந்தராகத்தினு லநேகதுக்கமனுபவிப்பதைப் பிரத்தியக்ஷமாகக்கண்டிருக்கிறபடியினாலும் இனி பிறக்கப்போகிறபேர்களிடத்திலு மிந்தராகமிருந்தாற் றுக்கமேயனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தராகத்தை முமூட்சுவானவர்கள் சர்வாத்மனாவிட்டுவிடவேண்டியதுசித்தம். இப்படியே தனக்கொருவனபகாரம்பண்ணினு லவனுக்குவதிலபகாரம்பண்ணவேண்டுமென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்குத் துவேஷமென்றுபேர். இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலுமில்லாமற் சர்வாத்மனாவிட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால் பூருவத்தில் இரணியகசிபன் தன்றமையனைக்கொன்ற நாராயணனைக் கொல்லவேண்டுமென்ற துவேஷத்தினு லவனுடைய பிராணஹானி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங்களி லபகீர்த்திக ளிவைமுதலான வநேகவநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமநேகம்பேரிந்தத் துவேஷத்தினால் துக்கமனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும் இப்போதிருக்கிறபேர்களு மிந்தத்துவேஷத்தினு லநேகதுக்கமனுபவிப்பதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும் இனி பிறக்கப்போகிறபேர்களிடத்திலு மிந்தத்துவேஷமிருந்தாற் றுக்கமேயனுப

விப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்த த்துவேஷ முமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டு விடவேண்டியது சித்தம்-இப்படியேபுத்திரமித்திர கிரகக்கிராமக்ஷேத்திர தனதான்யாதிகண் மேன் மேலுஞ் சம்பாதிக்கவேண்டுமென்று விகற்பித்துவ ருகிற சித்தவிருத்திக்குக்காமமென்றுபேர் - இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலுமில்லாமற்சர் வாத்மனாவிட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டி யதென்றால் பூருவத்தில் நரகாசுரன் லக்ஷம் ஸ்திரீக ளைக் கலியாணஞ்செய்வதற்காசித்துத் தேவஸ்திரீக ள் பதினாயிரம்பேர்களைச் சிறைபிடித்து வந்ததை க்கேட்ட ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியா லவன்பிராணஹா னி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங்களி லபகீர் த்தி யிவைமுதலான துக்கங்களனுபவித்தது மின்னு மநேகம்பேர் துக்கமனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலு மிப்போதிருக்கி றபேர்களு மிந்தக்காமத்தினா லநேகதுக்க மனுபவி ப்பதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினா லும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலு மிந் தக்காமமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென் று தோற்றுகிறபடியினாலு மிந்தக்காமமுமூட்சுவா னவர்கள் சர்வாத்மனாவிட்டுவிடவேண்டியதுசித்தம்.

வர்கள் சர்வாத்மனை விட்டுவிடவேண்டியது சித்தம்.

இப்படியே புத்திர மித்திர களத்திர தனதானியா
திசம்பத்துத் தனக்கேயுண்டு தனக்கொருத்தருஞ் ச
மானமில்லையென்று விகற்பித்து வருகிற சித்தவிரு
த்திக்குத் தர்ப்ப மென்று பேர் - இதைமுமூட்சு வா
னவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற்சர்வாத்மனை வி
ட்டுவிடவேண்டியது.

ஏன்விட வேண்டியதென்றால் பூருவத்திற்சதகந்த
ரனானவன் ஐஸ்வரியத்திற் றனக்கொருத்தருஞ் சமா
னமில்லையென் றமரர்களுக்கு உபத்திரவஞ் செய்த
தை நாரதரிராமருக்கறிவிக்க வவர் பாரியாளசீதை
யம்மனை லவன்பிராணஹானி பந்துநாச மிராச்சிய
ஹானியிகபரங்களிலபகீர்த்தியிவைமுதலானவநேக
வநர்த்தங்க ளனுபவித்தது மின்னு மிந்தத்தர்ப்பத்தி
னலநேகம்பேர் துக்கமேயனுபவித்ததுஞ்சாத்திரங்
களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும் - இப்போ
திருக்கிறபேர்க ளிந்தத் தர்ப்பத்தினாற்றுக்கமேயனு
பவிப்பதுபிரத்தியக்ஷமாகக்கண்டிருக்கிறபடியினாலு
ம்இனிப் பிறக்கப்போகிற பேர்களிடத்திலுமிந்தத்த
ர்ப்பமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்க ளென்று
தோற்றுகிற படியினாலு மிந்தத்தர்ப்ப முமூட்சுவா
னவர்கள் சர்வாத்மனை விட்டுவிட வேண்டியது சித்த
ம்-இப்படியே அடா யென்னைஅறியாயா - நான்பி

டித்தகாரியம்விடுவேனோநீயாவெனக்குப்புத்திசொ
ல்லுகிறவனென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்
ககங்காரமென்று பேர் - இதை முமூட்சுவானவர்க
ள்காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனாவிட்டுவி
டவேண்டியது.

ஏன் விடவேண்டிய தென்றால் பூருவத்தில்மதுகை
டவரென்பவர்கள் மகாவிஷ்ணுவோடு பதினாயிரம்வ
ருஷம் யுத்தஞ் செய்திளையாம லவர் வரங்களுக் காசி
யாமற் றாங்களந்த விஷ்ணுவுக்கு வரங்கொடுத்த வக
ங்காரத்தினாற் பிராணஹானி பந்துநாச மிராச்சிய
ஹானி யிகபரங்களிலபகீர்த்தி யிவைமுதலான வநே
கவநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமிந்த வகங்கார
த்தின லநேகம்பேர் துக்கமனுபவித்ததுஞ் சாத்திர
ங்களிற்கண்டிருக்கிறோமானபடியினாலும் இப்போ
திருக்கிற பேர்களிந்த வகங்காரத்தினாற் றுக்கமே ய
னுபவிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியி
னாலும் இனிப்பிறக்கப்போகிற பேர்களிடத்தி லிந்த
வகங்காரமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்க ளெ
ன்றுதோற்றுகிற படியினாலு மிந்த வகங்கார முமூ
ட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது
சித்தம் - இந்தராகமுதலகங்கார மீறான பதின்மூன்
றுகுணங்களினா லிராவணன் முதன்மதுகைடவா ளீ

ருனபேர்கள் மஹாசமர்த் தாளாயிருந்துமவர்கள்பி
ராணஹானி முதலானவநேக வநர்த்தங்கண் முன்ன
னுபவித்தது சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மான
படியினாலு மிப்படியே சத்தியவர்த்தமான காலத்தி
லுமிந்த்ராகாதி குணங்களா லநேகசனங்கள்பிராண
ஹானிகளும் அநேகரோகங்களும்- அநேக திரவிய
நாசங்களும் - பந்துக்கள் விரோதங்களும் அபகீர்த்
திகளும் இவைமுதலான வநேகவநர்த்தங்களனுபவி
க்கிறது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறோமானபடி
யினாலும் இனிப்பிறக்கப்போகிற பேர்களுமிந்த்ரா
காதி குணங்களினின்றும் விடுபடாமற் போனார்களா
கிலிப்படியே யநேகவநர்த்தங்களனுபவிப்பார்களெ
ன்று தோற்றப்படுகிற படியினாலும் இந்த்ராகாதிய
தின்மூன்று குணங்களு மோக்ஷ மார்க்கத்துக்குச்
சத்துருவாயிருக்கிற படியினாலும் சநநமரணப்பிர
வாகரூபமான நரகத்துக் கேதுவா யிருக்கிறபடியி
னாலும் இப்படிதின்மூன்று குணங்களையு முமூட்சு வா
னவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம்
இவைகளா லுண்டான சநநமரணமே நரகமென்ப
தா மிதற்குச்சமுசயமில்லை - சநநமரண ரூபமான
தேகமே நரகமென்பதற்குப் பிரமாணம் எங்கேசரீ
ரமுண்டோ வங்கே யெல்லாந்துக்கமுண்டு எங்கேசு
ரீரமில்லையோ வங்கே யெல்லாந் துக்கமில்லையென்

றுவேதத்திற் சொல்லியிருக்கிறபடியினு லிந்தச்சரீர
மே சகல துக்கங்களுக்குஞ்சகல வநர்த்தங்களுக்கு
மேதுவாக விருப்பதினு லிந்தச் சரீரமே நரகமெ
ன்றுசொன்னதுசித்தம்.

ஆதலாலிந்தச் சரீரத்துக்கேதுவான இப்படின்மூ
ன்றுகுணங்களையு முமூட்சுவாயிருக்கப்பட்ட பேர்க
ளவசியம்விட்டுவிடவேண்டியதுசித்தம்.

இனிக் கொள்ளத்தக்கதுகளான விச்சைமுதன்மூ
ன்று குணங்களையு நிரூபிக்கிறோம் - அவை யாவன
யசிதாக நிமித்தமன்ன பானுதிகிராகியமுமலமூத்தி
ரவிசர்ச்சனமும் பண்ண வேண்டுமென்று வருகிற
த்தவிருத்திக் கிச்சையென்றுபேர் - இவை பண்ணு
மற்போனுற் றுக்கமும் பண்ணினுற் சுகமுமாயிருக்
குமிதனுற் பந்தமோக்ஷஞ் சுவர்க்கநரக மில்லையாது
லாற் கொள்வத்தக்கதாம் - இப்படியே மகாதேவரி
டத்திற் பிரியம்வருகிற சித்தவிருத்திக்குப் பத்தியெ
ன்றுபேர் - குருவேதாந்த சாத்திரங்களின் மிகவும்
விசுவாசம் வைத்த சித்தவிருத்திக்குச் சிரத்தையெ
ன்றுபேர் - இந்தப்பத்திசிரத்தை முத்தியை யடை
விப்பதற் கேதுவாதலினுலும் பூருவத்திற்கட்டுவாங்
கதனென்கிற மகாராஜனிந்தச் சிரத்தாபத் தியினுலி
ரண்டு நாழிகையின் முத்தியை யடைந்தானென்று
சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினுலுமு

மூட்சுவானவர்களிந்தச் சிரத்தாபத்தியவசியம்பண்
ணவேண்டியதுசித்தம் - இராகாதிபதினாறுகுணங்க
ளுநிரூபிக்கப்பட்டது.

ராகத்துவேஷப்பிரகரணஞ்சம்பூரணம்.

இரண்டாவது

## சாதனசதுஷ்டயப்பிரகரணம்.

முற்பிரகரணத்திற் கற்பனாரூபமான விஷயசுகங்
களைப்பிரியமாக விசுவசித்ததிற் சுழலாநின்ற மனோ
விருத்திக்கவைகளுண்டாமெனத் தெரிவித்தவ் விருத்தி
யைவிஷய சுகங்களினின்று நீக்கிமேல்யதார்த்தசுகத்
திற் பிரியம்வைக்கும்படிசெய் ததனாலுண்டான சிர
த்தாபத்தியினாற்சித்தசுத்தியுண்டாக்கிப்பின்பவ்யதா
ர்த்தம் வெளிப்படுதற்கேதுவான சாதன சதுஷ்டய
ப்பிரகரணநிரூபிக்கிறார்.

சுலோகம்.

చతుష్టయంసాధనానాంవేదాంతేషుప్రతిష్ఠితంత
స్యస్వరూపంక్రమతస్తావత్తత్రనిరూప్యతే ॥ ౪ ॥

( இதனதுபொருள். )

வேதாந்தத்தினான்கு சாதனங்களதிகாரிகளுக்காக

ச்சொல்லியிருக்கின்றது - அவைகளின்ஸ்வரூபங் கிர
மத்தினிரூபிக்கப்படுகின்றது.

எந்தச் சாதனசதுஷ்டய சம்பத்தினுல் யாவரு
ம் மோக்ஷமடைவார்களோ வந்தச் சாதன சதுஷ்ட
ய சம்பத்தியை நிரூபிக் கிறோம் அவையாவன - நி
த்தியா நித்திய வஸ்துவிவேகம் இகா முத்திரார்த்த
பலபோக விராகம் - சமாதி சட்கசம்பத்தி - முமு
ட்சுத்துவமென நான்குவிதமாம் - இவற்றில் நித்தி
யா நித்தியவஸ்து விவேக மென்பது பிரமமே நித்
தியவஸ்து சகத்தநித்திய வஸ்து வெனப்பகுத்தறிவ
தாம்.

இச்சகமநித்தியமென்பதெப்படியென்றால்இவை
பூதபவுதிகாத் மகமான படியினு லநித்தியமேயாம்-
இங்ஙனம் பூதபவுதிகாத் மகமாகத் தோற்றப்படுகிற
சகத்தின்முன்னே பவுதிகங்களுக் கநித்தியத்துவ நி
ரூபிக்கிறோம்.

அப்பவுதிகமாவதியாதெனில் - நால்வகையோனி
எழுவகைத்தோற்றம்- எண்பத்துநான்குலக்ஷம்-பே
தங்களாயுள்ளசரீரங்களாம்.

அவற்றில்நால்வகையோனியென்பது - சராயுசம
ண்டசஞ்சுவேதச முற்பிச மென்பனவாம்- இவற்றி
ல்பையிற் கட்டுப்பட்டுப் பிறப்பது சராயுசமும் மு
ட்டையிற் கட்டுப்பட்டுப் பிறப்பது - அண்டசமும்-

வியர்வை யிடமாகப் பிறப்பதுசுவேதசமும் - பூமி யிடமாகப்பிறப்பதுஉற்பிசமுமாம்.

எழுவகைத்தோற்றமென்பது - தேவரும்மானிடரும் மிருகமும்பக்ஷிகளும் ஊர்வனவும் நீர்வாழ்வனவுந்தாபரங்களுமாம்.

எண்பத்து நான்குலக்ஷம் பேதமென்பது - தேவபேதம் பதினாலுலக்ஷமும்-மானிடபேதமொன்பதுலக்ஷமும், மிருகபேதம்பத்துலக்ஷமும்- பக்ஷிபேதம் பத்துலக்ஷமும்-ஊர்வனபேதம் பதினொருலக்ஷமும்-நீர்வாழ்வனபேதம் பத்துலக்ஷமும் - தாபரபேதம் பதினெட்டுலக்ஷமுமாம்.

இவற்றில்-தேவகந்தருவ சித்தசாத்திய கின்னரகிம்புருட குய்யகவித்தியாதர யக்ஷராக்ஷச பூதப்பிரேதபிசாச சாகினிடாகினி வேதாளாதியான தேவசரீரங்களும் மனுமாந்தாதி சக்கரவர்த்தி பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திரர்முதலான நரசரீரங்களும் காமதேனு சிம்மமுதலானமிருகசரீரங்களும், அன்னங் கருடன்முதலான பட்சிசரீரங்களும், சேடனெறும்புமுதலிய ஊர்வனசரீரங்களும், மகரமச்சங்கூர்மமுதலிய நீர்வாழ்வனசரீரங்களும், கற்பகவிருக்ஷம் பாரிசாதமுதலிய தாபரசரீரங்களுமாம்.

பூருவத்திலித்தேவர்முதலிய வெண்பத்து நான்குலக்ஷம்பேதமாயுள்ள சரீரங்களும் நசித்துப்போன

து சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினாலும் இப்படியே சத்தியவர்த்தமான காலத்திலுமிருக்கிற மாதாபிதாமுதலான சகலசரீரங்களும் நசிப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினாலும் இனிப் பிறக்கப்போகிற சகலசரீரங்களுமிப்படியே நசிக்குமென்று தோற்றப்படுகிறபடியினாலு மிந்தப்பவுதிகமான சகலசரீரங்களு மநித்தியமென்பதுசித்தம்.

இப்படியே பிருதிவியாதி பஞ்சபூதங்களுக்கு மநித்தியத்துவம் நிரூபிக்கிறோம்.

அஃதெப்படியென்றால் இப்பூதங்கள் பிறந்திருக்கிறபடியினாலும் அவயவிகளாயிருக்கிற படியினாலும் பிரளயகாலத்தினசித்துப்போகிறபடியினாலும்அநித்தியமேயாம்.

அவைகளெப்படி நசிக்கிறதென்றால்- பிரமப்பிரளயம்வருகிறகாலத்திற் பனிரெண்டுசூரியர்களு-முதயமாய் நூறுவருஷம்மழையில்லாமலெரித்துச் சகத்தெல்லாம்பஸ்பம்பண்ணிப் பூமியைத்தாங்கிக்கொண்டிருந்த வாதிசேடனுடைய மகுடங்களை பஸ்பம் பண்ணுகிறபோ தந்தவாதிசேடனுடைய முகங்களிலிருந்து காளகூடவிஷாக்கினி பிறந் தந்த விஷாக்கினியுஞ் சூரியாக்கினியுங்கூடி யந்தவாதிசேடன் முதற்றுவாதசாதித்தாளையும் பஸ்பம்பண்ணி யப்படிப் பஸ்பம்பண்ணின வக்கினியினின் றுஞ்சத்தமகாமே

கங்கள்பிறந்து நூறுவருஷம் யானைத்துதிக்கைபோல வருஷதாரைகள் வருஷிக்கும் அந்தவருஷசலமே காரணவமாநிற்கும்-அந்தச்சலத்தில் அப்பூமி ப்ரஸ்யம் லீநமாகும்-அப்போதந்தச்சலம் வாயுஸ்தம்பமாநிற்கும் அப்படிநிற்கின்றசலத்தில் வடவானலம்பிறந்தந்தபேகாரணவமானசலமெல்லாங்கிரிகிக்கும். அவ்வடவாக்கினியும் பிரசண்டவாயுவி லீநமாகும். அந்தவாயுவு மாகாசத்திலீநமாகும். அவ்வாகாசமுமஞ்ஞானத்திலீநமாகும். அவ்வஞ்ஞானமும் பிரமத்திலீநமாகும். அப்பிரமமொன்றுமே சேஷித்துநிற்கும் ஆனபடியினாற்பஞ்சபூதபவுதிகாத்மகமானசகத்தநித்தியமென்றுசொன்னதும்- இப்படிசேஷித்து நின்றபிரமத்துக்கு வேறேகாரணமில்லாதபடியாற்பிரமமேநித்தியமென்றுசொன்னதுஞ்சித்தம்.

இங்ஙன நித்தியாநித்தியவஸ்துக்களி னிச்சயந்தெரிதலாகிய முதற்சாதனங் கைவந்தாற் போதாதோவென்றாற் போதாது-என் போதாதென்றாற் சிலவித்துவான்கள் சாஸ்திரபாண்டியத்தினா லாத்மாவொன்றுமே நித்தியமென்றுஞ் சகத்தநித்தியமென்றுஞ்சொல்லிக்கொண்டு ஸ்திரீபுத்திரதனதானியாதிபோகங்களி லிச்சைவைத்துக்கொண்டிருக்கிறதினா லநித்தியமானது நித்தியமென்றுவருமாதலா னிரண்டாஞ்சாதனமான விகாமுத்திரார்த்த பலபோகவிராக

முஞ் சம்பாதிக்கவேண்டும்.

இவ்விகாமுத்திரார்த்தபலபோகவிராகமாவதியா தென்றா லதையுநிரூபிக்கிறோம்.

அஃதாவது இகலோகவைராக்கியமென்றும் பரலோகவைராக்கியமென்று மிரண்டுவிதமாம்.

இவற்றிலிகலோகவைராக்கியமாவது ஸ்ரக்குசந்தன வநிதாதிவிஷயங்களில் வாந்தாசன மூத்திரபுரீஷங்களி லெப்படி யிச்சைவராதோ வப்படியிச்சைவராமற்போகிறது-இவ்விக வைராக்கிய மில்லாவிட்டா லிகத்திற் றான்சம்பாதிக்கவேண்டுமென்கிற புத்திரமித்திரகளத்திர பசுபிரத்திய பலபந்து கிரகக்கிராமக்ஷேத்திர தனதானியாதிகள் முதலியவற்றைச் சம்பாதிக்கவேண்டுமென்றால் மிகவும் பிரயாசசாத்தியமாயிருக்கிறபடியினாலும் பிரயாசப்பட் டெத்தனம்பண்ணினா லப்படியெத்தினம்பண்ணின பதார்த்தங்களிற் சிறிதுகூடிவருகிறதாஞ் சிறிதுகூடிவராமலும் போகிறபடியினாலும் அப்படிக் கூடிவராத பதார்த்தத்தைத்தொட்டு வெகு துக்கபரம்பரைகள் வருகிறபடியினாலும் அந்தத் துக்கத்தோடு கூடிக் கொண்டிருக்கிறவேளையிற் பெரியோர்களா யிருக்கப்பட்ட பேர்கள்வந்தேதாகிலுஞ் சற்காரம்பண்ண வேண்டுமென்று கேட்டதுண்டானா லவர்கள்பேரில்

வாரா சமாதிஞானமுண்டாம், இந்த ஞானத்துவா ரா மோக்ஷமடைவார்களாதலாற் புண்ணியகன்மங்க ளை நிஷ்காமமாயவசியஞ்செய்யவேண்டியது சித்தம்.

ஈஷணாத்திரயத்தியாகமாவது தனத்தினிடத்தும் புத்திரனிடத்துந்-தாரத்தினிடத்து மிருக்கின்ற விச் சையை நீக்குதலாம்.

இவ்விதமான வுபரதியை யவசியம்பண்ணவேண் டியது சித்தம்.

திதிக்ஷையாவது-சுகதுக்கங்கள்வரிற்பொறுத்திரு த்தலாம். அஃதாவது, தான்சம்பாதித்திருக்கிற புத் திர மித்திர களத்திராதியான சகலபதார்த்தங்களுஞ் செவ்விதாயிருந்தாற்சுகம் அப்பதார்த்தங்களுக்கே கா ரிவிக்கினம்வந்தாற்றுக்கம். இச்சுகதுக்கங்கள் லாபா லாபங்கள் மாநாவமானங்கள் செயாபசெயங்கள் த ன்னையொருவர்வாதிக்கிற் றன் தண்டிப்பதிற்கதிகா ரமிருந்தும் பொறுத்தலிவைமுதலானவைகளிற்சகி த்திருப்பதாம்.

இத்திதிக்ஷைபண்ணுமற்போனு லித்தொந்தங்களி லகப்பட்டநேகவநர்த்தங்களுமநேகபாவங்களுமநேகசாஞ்சல்யங்களுந் தேகசோஷிணைகளும் பெரி யோர்கள் சஹவாசத்துக்கு விக்கினங்களு மவர்கள் சொல்லும் வசனங்கள் மனதிற்றரியாமற்போகிறது மிவைமுதலான தோஷங்களநேகமிருக்கிறபடியினு

விப்பொறுமை ரூபமாயிருக்கப்பட்ட திதிக்ஷையவ
சியம் பண்ணவேண்டியது சித்தம்.

சமாதானமாவது-சவேந்திரியங்களையுஞ்சிரவணத்
தினிறுத்தல்அஃதாவதுபெரியோர்களிடத்திற்சேர்ந்
துசிரவணம்பண்ணுகிறகாலத்தின் மனமுமிந்திரியங்
களும் வாசனாவசத்திற்செல்லாமற்றிருப்பிச்சிரவண
த்தின்பேரிலேகாக்கிரமாகநிறுத்துதலாம்.இதைப்ப
ண்ணாமற்போனாற்பெரியோர்கள்வசனிக்கும்வசனங்
கள் மனதிற்பிடிபடாமல்விஷயங்களிற்சென்றுகொ
ண்டிருக்கும் அதனாற் பெரியோர்கள் சொன்னதிற்
பயனில்லாமற் றானினைத்திருக்கிற காரியமுமாகாம
ல் உபயப்பிரஷ்டத்துவம் வருமதனா லநேகதுக்கப்
பிராப்திகளுண்டா மதனால் மோக்ஷத்துக்கு விக்கி
னங்கள்வருகிறபடியினா லிச்சமாதானம் அவசியம்
பண்ணவேண்டியது சித்தம்.

சிரத்தையாவது-பத்திவிசுவாசமென விரண்டாம்.

அவையாவன-தாய்தந்தைமுதலானவைகளிடத்தி
லிருக்கிற பிரியங்களெல்லாஞ் சற்குருவேதாந்த வா
க்கியங்களிடத்தி லேகாக்கிரமாக வைப்பது விசுவா
சமும் - ஈஸ்வரனிடத் தேகாக்கிரமாகவைப்பது பத்
தியுமாம்.

இவற்றில் சற்குருவினிடத்தின் மிகவும் விசுவாச

ம்பண்ணவேண்டியது-என் பண்ணவேண்டியதென்றால் அவர்மகிமை முன்னதாக நிரூபிக்கிறோம்.

அஃதாவது, பிராந்திரகிதராயும் பரிபூரணராயும்-ஞானம் பத்தி வைராக்கியசம்பன்னராயும், நிரந்தரசந்தோஷத்தை யடைந்தவராயும், நித்தியதிருத்தியடைந்தவராயும், சச்சிதானந்தப்பிரமஸ்வரூபராயும், தேசகால வஸ்து பரிச்சேத ரகித ராயும், சுசாதி விசாதி சுகத பேத ரகிதராயும், சட்பாவ விகாரரகிதராயும், சுத்த புத்த முத்த நித்தியபரமானந்தஸ்வரூபராயும், சர்வ பரிபூரண கருணா சாகரராயும், நிருவியாச்சிய-நிர்லேப-நிர்ச்சங்க-நிர்வாண-நிஷ்காம-நிரூப-நிரந்தர - நிரவயவ - நிர்விசேஷானந்த-நிருபத்திரவ-நிபத்த-நிர்வேத்திய- நிர்க்குண-நிரஞ்சன-நிச்சல-நிஷ்பிரபஞ்சஸ்வரூபராயும்-அச்சேத்திய - அக்கிலேத்திய - அசோஷிய - அதாகிய-அசல-அவாச்சிய-அநாமய-அக்ஷர - அப்பிரமேய-அசிந்திய-அந்நியபாசிய-அக்குரோத-அவிதர்க்கிய அதிரிசிய - அநாசிரய-அநாதார - ஆநந்த - அகண்டாகாரஸ்வரூபராயும் - விசுவதைதச - பிராஞ்ஞைக்கதீதமான - பிரத்தியக்குசைதன்னியராயும்-விராட்டிரணியகர்ப்ப வவ்வியாகிருதங்களை யறிகின்ற சர்வசாக்ஷியராயும் - மூலப்பிரகிருதி யகண்டாகார விருத்தியானந்த விருத்திபதிதராயும் - கிருதகிருத்திய

ராயும் - ஸ்வரூபஞானமில்லாத மூடாள்மலமூத்திர பாத்திரமா யிருக்கப்பட்டதேகமே - நானென்றிந்தச்சரீரத்தைக் குறித்துவந்த ஹானிவிருத்திகளும்சாதி-வர்ணம் - குலம்- கோத்திரம்- ஆசிரமம் - நாமம் வேஷமாதிகளும் - ஜநநமரணங்களும்- நானென்று கொண்டிருக்கிறவாளாய் சங்கற்ப விகற்பமா யிருக்கிறமனதை நானென்று கொண்டிருக்கிறவாளாய் உசுவாச நிசுவாசமா யிருக்கின்ற பிராணவாயுவை நானென்றுகொண்டிருக்கிறவாளாய் ஆபாசமா யிருக்கிறஜீவனை நானென்று கொண்டிருக்கிறவாளாய் சசவிஷாணம்போலிருக்கிற சூனியமே நானென்று கொண்டிருக்கிறவாளாய் இவை முதலானவநேகமதஸ்தர்களும்-க்ஷிரிகியங்களாய் - பரிச்சின்னங்களாய்-சாவயவங்களாய்-அனுர்தசடதுக்கரூபங்களாய்அஞ்ஞானமுதலான தேகேந்திரிய பிராணபுத்தியே நானென்றுகொண்டிருக்கிறவாளாய் - லோககாமியாயிருக்கப்பட்டஜீவனே நானென்றுகொண்டுகிஞ்சிக்ஞியாளாய்-சுத்தமூடசிரோமணியா யிருக்கிறபேர்கள் கூட நிரோதுகமாய்-சற்குருவினுடைய வீக்ஷணியத்துக்குப் பாத்திரமானார்களாகில் அவ்வீக்ஷண்யாதிசயத்தினாற் சர்வகன்ம விமுத்தாளாய்- அவர்களிடத்திற்சேருவார்கள்- அப்படிச்சேர்ந்தவர்களுடையபாவங்களும் - ஜநநமரணரூபங்களாயிருக்கிற - சகலவி

ராந்திகளும்-சூனியம்பண்ணித் தங்களைப்போலக் கி
ருதகிருத்தியாளாய்ப்பண்ணுகிறவராயுமிருப்பதாம்

சுலோகம்.

బహవో గురవస్సంతిశిష్య విత్తాపహారకాః। దుర్ల
భోయంగురు ర్దేవశిష్యహృ త్తాపహారకః. [౫౭]

(இதனது பொருள்.)

சீடனது கைப்பொருள்பறிக்கும்படியானவாசா
ரியர் வெகுபேருண்டு- அச்சீடனது மனத்தின்கண்
ணுள்ள துன்பத்தைப் பறிக்கும்படியான வாசாரி
யர் கிடைப்பதரிது.

இப்படிக்குச் சாஸ்திரங்களிற் பிரமாணங்களிரு
க்கிறபடியினாலு மிங்ஙனங் கிடைப்பதற்கரிய சற்கு
ருவினிடத்தி னவசியமிகவும் விசுவாசம் வைக்கவே
ண்டியது சித்தம்.

இப்படியே வேதாந்தசாஸ்திரத்தினிடத்திலு மவ
சிய மிகவும் விசுவாசம்பண்ணவேண்டியது. ஏன்ப
ண்ணவேண்டியதென்றால்- வேதாந்தசாஸ்திரங்களி
லு மகாமகிமைகளிருக்கின்றபடியினால் அம்மகிமை
யென்னவென்றால்-அவ்வேதாந்தசாஸ்திரங்கள்சகல
பிராந்திகளையுஞ் சூனியம்பண்ணுகிறதாயும் சநநம
ரணமென்கிற சம்சாரசாகரந்தாண்டுகிறதற்குத்தெ
ப்பமாகியும் - ஸ்வகர்மகுணஜாலமென்கிற மேகங்க

ளைப்போக்கடிக்கிற பிரசண்டவாயுவாகியும் - ஆதி யாத்மீக மாதிபவுதிக மாதிதெய்வீகமென்கிற தாப த்திரயாக்கினிகளைச் சாந்திபண்ணுகிற அமிர்தவரு ஷிமாகியும்-புத்திர மித்திர களத்திர பசுப்பிரத்தியக் கிரகக் கிராமக்ஷேத்திர தனதானியாதிகளிடத்திற் பி ரியமோதப் பிரமோதமா யிருக்கின்றவஞ்ஞானமா ன மோகாந்தகாரத்தைப் போக்கடிக்கிற சூரியப்பி ரகாசமாகியும்-தானத்திரய-சங்கத்திரய- பந்தத்திர ய-சீவத்திரய-சத்தித்திரய-விருத்திரய-தெய்வத்தி ரய-ஈஷணத்திரய-கர்மத்திரய-காரணத்திரய - வாச ஞத்திரய-மானவிவ்விலங்குகளைப் பேதிக்கிற வச்சி ராயுதமாகியும்-இதரமான சப்தமீமாம்ச - மந்திர கர்ம-யோக-நியாய-மிவைமுதலான சாத்திரங்கள்ப டித்துஞ் சுகதுக்கமோக கர்மபந்தசநநமரணங்களை நிரசனம்பண்ணமாட்டாமற் சமுசயங்களோடுகூடி யநேகமயக்கங்களிலுள் மோக்ஷமார்க்கமறியக்கூடா மலு மிருக்கிறபேர்கள்கூடத் தெய்வாதீனமாய் வேதாந்த சாத்திரசிரவணம்பண்ணினாலந்தச் சமு சயங்களையுஞ் சகலபய துக்க மோகாதிகளையுந்தள்ளி மோக்ஷகதியைக் காண்பிக்கிறதாயிருக்கிற படியினா லு மிந்த வேதாந்தசாத்திரங்களின்மேரில் மிகவும் விசுவாசம்பண்ணவேண்டியது நிச்சயம்.

இப்படியே ஈஸ்வரனிடத்திலு மவசியமிகவும்பத்

ராந்திகளும்-சூனியம்பண்ணித் தங்களைப்போலக் கி ருதகிருத்தியாளாய்ப்பண்ணுகிறவராயுமிருப்பதாம்

சுலோகம்.

బహవో గురవస్సంతి శిష్య విత్తాపహారకాః। దుర్ల భోయంగురు ర్దేవ శిష్యహృత్తాపహారకః. [౫౯]

(இதனது பொருள்.)

சீடனது கைப்பொருள்பறிக்கும்படியானவாசா ரியர் வெகுபேருண்டு- அச்சீடனது மனத்தின்கண் ணுள்ள துன்பத்தைப் பறிக்கும்படியான வாசாரி யர் கிடைப்பதரிது.

இப்படிக்குச் சாஸ்திரங்களிற் பிரமாணங்களிரு க்கிறபடியினாலு மிங்ஙனங் கிடைப்பதற்கரிய சற்கு ருவினிடத்தி லவசியமிகவும் விசுவாசம் வைக்கவே ண்டியது சித்தம்.

இப்படியே வேதாந்தசாஸ்திரத்தினிடத்திலு மவ சிய மிகவும் விசுவாசம்பண்ணவேண்டியது. ஏன்ப ண்ணவேண்டியதென்றால்- வேதாந்தசாஸ்திரங்களி லு மகாமகிமைகளிருக்கின்றபடியினால் அம்மகிமை யென்னவென்றால்-அவ்வேதாந்தசாஸ்திரங்கள்சகல பிராந்திகளையுஞ் சூனியம்பண்ணுகிறதாயும் ஜநநம ரணமென்கிற சம்சாரசாகரந்தாண்டுகிறதற்குத்தெ ப்பமாகியும் - ஸ்வகர்மகுணஜாலமென்கிற மேகங்க

ளைப்போக்கடிக்கிற பிரசண்டவாயுவாகியும் - ஆதி
யாத்மீகமாதிபவுதிகமாதிதெய்வீகமென்கிற தாப
த்திரயாக்கினிகளைச் சாந்திபண்ணுகிற அமிர்தவரு
ஷமாகியும்-புத்திர மித்திர களத்திர பசுப்பிரத்தியக்
கிரகக் கிராமக்ஷேத்திர தனதானியாதிகளிடத்திற் பி
ரியமோதப் பிரமோதமாயிருக்கின்றவஞ்ஞானமா
னமோகாந்தகாரத்தைப் போக்கடிக்கிற சூரியப்பி
ரகாசமாகியும்-தானத்திரய-சங்கத்திரய- பந்தத்திர
ய-சீவத்திரய-சத்தித்திரய-விந்தாத்திரய-தெய்வத்தி
ரய-ஈஷணாத்திரய-கர்மத்திரய-காரணத்திரய - வாச
னாத்திரய-மானவிவ்விலங்குகளைப் பேதிக்கிற வச்சி
ராயுதமாகியும்-இதரமான சப்தமீமாம்ச - மந்திர
கர்ம-யோக-நியாய-மிவைமுதலான சாத்திரங்கள்ப
டித்துஞ் சுகதுக்கமோக கர்மபந்தசநநமரணங்களை
நிரசனம்பண்ணமாட்டாமற் சமுசயங்களோடுகூடி
யநேகமயக்கங்களினன் மோக்ஷமாகிறகரையைக்கா
ணாமலுமிருக்கிறபேர்கள்கூடத் தெய்வாதீனமாய்
வேதாந்த சாத்திரசிரவணம்பண்ணினாலுஞ் சகலசமு
சயங்களையுஞ் சகலபயதுக்கமோகாதிகளையுந்தள்ளி
மோக்ஷகதியைக் காண்பிக்கிறதாயிருக்கிற படியினா
லுமிந்த வேதாந்தசாத்திரங்களின்மேலே மிகவும்
விசுவாசம்பண்ணவேண்டியது நிச்சயம்.

இப்படியே ஈஸ்வரனிடத்திலுமவசியமிகவும்பத்தி

தியண்ணவேண்டியது-என் பண்ணவேண்டியதென்றால்சகலத்திற்குங்காரணராயும்-பாவமும்-கர்மமும், நாமமும்-ரூபமும்-குணங்களுமில்லாமல் உற்பத்தி-ஸ்திதி-லயம்-பண்ணுகிறநிமித்தம்-நிசமாயையினாற் சீவசகத்துக்களை விஸ்தரிக்கிறவராயும்- அச்சீவசகத்துக்களி லனுகூதராயும்-அவ்வியாகிருத மிரணியகர்ப்ப-விராட்டு-பிரமா-விஷ்ணு-மயேஸ்வர ராமகிருஷ்ணாதியவதாரராயும் - சற்குருரூபங்களாயுமிருக்கின்றபடியினா லந்தவீஸ்வரனைக்குறித்துச் சிரத்தாபத்தியோடும்-உபாசனைபண்ணினா லதனாலீஸ்வரானுக்கிரகமுண்டா யவ்வனுக்கிரகத்தினாற் சகலபாவங்களுநசித்து மோக்ஷத்தையடைகிறார்களாதலா லிந்தவீஸ்வரனிடத்தி லவசிய மிகவும்பத்திபண்ணவேண்டியது சித்தம்.

இப்படி குருவேதாந்தவாக்கிய மீஸ்வராளிடத்தின் மிகவும் விசுவாசம்பண்ணுமற்போனாற் சநநமரணப் பிரவாகரூபமான சம்சார துக்கமென்கிற நரகந்தப்பாமலும் அஞ்ஞானமும்-அவிவேகமும்-அபிமானமும்-ராககர்மசரீர துக்கபயாதிகளு மிவைமுதலான சகலபிராந்திகளுஞ் சூனியமாகாமலு மிருக்கின்றபடியினா லவசியம் சற்குருவேதாந்தவாக்கிய மீஸ்வரனிவர்களிடத்தின் மிகவுஞ்சிரத்தாபத்திபண்ணவேண்டியது சித்தம்.

இங்ஙனஞ் சமதமாதி குணங்களையுடைய சமாதி
ஷட்கசம்பத்தியான மூன்றாஞ்சாதனங் கைவந்தாற்
போதாதோவென்றாற் போதாது-என் போதாதெ
ன்றால், சிலர் தான் ஞானியெனவும், யோகியெனவு
ம், குருக்களெனவும், பாரம்பரியமான பெரியோ
ர்கள்வம்சத்திற் பிறந்தவனெனவுஞ் சொல்லிக்கொ
ண்டு முன்னுள்ள மகான்கள்பேரை வைத்துக்கொ
ண்டு அவர்கள் மகாமகிமையுள்ள குணாதிசயங்கள்
தங்களுக்கிருக்கிறதுபோலச் சமதமாதிகளை வரவ
ழைத்துக்கொண்டு நிர்வியாசமாகச் சாந்தாதிகுண
ங்களையடைந்து மோக்ஷமெப்போதுவருமென்கிற
விசாரமில்லாமற் சோம்புமயக்கஞ் சமூசயமிவை
களையுடையவனைத் தேகசவுக்கியத்துக்காக வதற்கு
த்தகுந்த புசிப்பின் மிகவும் விருப்பமுள்ளவனாய் வி
சித்திரமார்க்கங்களை யப்பியாசித்துக்கொண்டு ஞா
னம்போலச் சிலவார்த்தைகளைக் கற்றுக்கொண்டு ஆ
த்மானந்தத்தையடையாமல் மூடசிரோமணியாயி
ருப்பார்களாதலால் நான்காஞ்சாதனமான முமூட்
சுத்துவமும், அவசியஞ் சம்பாதிக்கவேண்டியது.
அஃதாவது மோக்ஷவிருப்பமாம். அதையு நிரூபி
க்கிறோம்.

சநநமரணப் பிரவாகரூபமான சமுத்திரத்திலிரு
க்கிறபேர் தாபத்திரயங்களி லடிபட்டிந்தச் சம்சார

ம் மகாரவுரவாதி நரகத்தைக்காட்டிலு மதிக துக்க
மாயிருக்கிறபடியினு லிச்சம்சாரத்தில் க்ஷணமாத்தி
ரமாகிலு மிருக்கலாகாதென்று மகாபயத்தையடை
ந்திப்படிப்பட்ட கோரமான சம்சாரபய துக்கமோ
கப் பிரமைகளைப்போக்கடித்து நித்த - சுத்த-புத்த-
முத்த-சத்தியபரமானந்தாத்துவித சுகஸ்வரூபமா
யிருக்கப்பட்ட சாம்பிராச்சியத்தை எந்தப் பெரி
யோர்களா லடையலாகுமோ இப்படிப்பட்ட சற்
குருவெங்கேயிருக்கிருரோ விதற்கென்னசாதனங்க
ள்வேண்டுமோவென்கிறவிசாரத்தோடுந் தலையினெ
ருப்புப்பற்றினவனுக்கும் - நாக்கு வரண்டுபோனவ
னுக்குந் தண்ணீரைக்கண்டாலொழிய வொருகாரிய
த்திலு மனதுமீளாததுபோல வெப்போமோக்ஷம்
வரப்போகிறதென்றெடுத்த விடாய்த்திராமற் கிருத
கிருத்தியனுமளவும் விசாரத்தினுற் றபித்துக்கொண்
டிருக்கிறதேமுமூட்சுத்துவமென்றுசொல்லப்படும்.

இந்த முமூட்சுத்துவ மில்லாவிட்டாற் சநநமர
ணமென்கிற நரகம்விடாது பந்தமும் போகாதான
படியினுலெவ்விதத்திலு முமூட்சுத்துவம் சம்பாதி
க்கவேண்டியது சித்தம்.

இச்சாதனங்களுள்ளவனே பிரமவிசாரத்துக் கதி
காரியாவன்-அவ்விசாரமாவது-சடமின்னதென்றறி
ந்து அதை நீக்கிச் சத்தையறிகிறதற்குச் சற்குருத

ரிசனமாயவரிடத்தின்மகாவாக்கியவுபதேசம்பெற்
றுக்கொண்டுவேதாந்தமகாவாக்கியார்த்தநிச்சயமா
னசீவபரவைக்கியநன்றாகவிசாரித்தவைகளொன்றா
ன வனுபவமுண்டாகவிசாரிப்பதேவிசாரணையாம்.

அஃதுவேண்டுமென்பதற்குத் திட்டாந்தம் பசித்
தன்னம்வேண்டினவனுக்கதற்குச்சாதனமான இடம்
விறகுபாத்திரம்சலம்-அரிசி- இவைகளிருக்கினும் ப
சியைப்போக்கடிக்கமாட்டாது- இவைகளுடனேஅ
க்கினியொன்றுகூடினாலவ்வரிசியையன்னமாகப்பா
கம்பண்ணி அச்சாதனங்களுடனேதானுநட்டமாய்
ச் சாடராக்கினி ரூபமாயிருந்துக்கொண்டு முன்பா
கம்பண்ணினவன்னத்தைப்புசித்துப்பசிநீங்கியச்சா
டராக்கினியுந் திருத்தியாகாரமா யெப்படி சுகமாயி
ற்றோவப்படியே ஆத்மவிசாரமென்னு மக்கினிபிற
ந்து குருவென்கிறவிடத்தில்வியாபித்துவேதாந்தசா
த்திரமென்கிற விறகினாற் பிரகாசித்து மானிடசென்
மமென்கிற பாத்திரத்திற் சாந்தகுணமென்கிற சல
த்திற்சையோகமாய்அறிவென்கிறவரிசியைப்பாகம்
பண்ணி அவ்விசாராக்கினியு முன்னுள்ள சாதனங்க
ளோடுநட்டமாய்த்தான்சமைத்தபூரணமானவன்ன
த்தைப்புசித்துச்சநநமரணமென்கிறதுக்கமானபசி
நீங்கிதனக்கெதிரில்லாதவத்துவிதானந்ததிருத்தியை

அப்புவினிடத்தி லாகாசஞ் சித்தம், ஸ்தானம்நா
பி அப்புவினிடத்தில் வாயு அபானவாயு - ஸ்தானங்
குதம் அப்புவினிடத்தி லக்கினி சிகுவை யிந்திரியம்-
ஸ்தானஞ் சிகுவை அப்புவினிடத்தி லப்புரசதன்மா
த்திரை- அப்புவினிடத்திற் பிருதிவிகுய்யேந்திரியம்
ஸ்தானம் குய்யம்.

இதற்குச் சுலோகம்.

చిత్తంచాపానవాయుశ్చజిహ్వారసనమేవచ।గుహ్యం
పంచవిధఃప్రోక్తఃఇత్యేతజ్జలపంచకం [౧౮]

இதனதுபொருள்.

இந்தச் சித்தம் அபானவாயு சிகுவையிந்திரியம்
ரசவிஷயம்-குய்யேந்திரியம் ஆகவைந்தும் அப்பு
பஞ்சீகிருதி,

அக்கினியினிடத்தி லாகாசம்புத்தி-ஸ்தானம்நேத்
திரம், அக்கினியினிடத்தில் வாயு உதானவாயு, ஸ்தா
னங்கண்டம், அக்கினியினிடத்தி லக்கினிநேத்திரேந்
திரியம், ஸ்தானம்நேத்திரம் அக்கினியினிடத்திலப்பு
ரூபதன்மாத்திரை, அக்கினியினிடத்திற் பிருதிவிபா
தேந்திரியம் ஸ்தானம்பாதம்.

இதற்குச்சுலோகம்.

బుద్ధిశ్చోదానవాయుశ్చ నేత్రంరూపంత థైవచ।పా
దౌపంచ్చవిధఃప్రోక్తఃఇత్యేతద్వహ్నిపంచకం [౧౯]

இதனதுபொருள்.

இந்தப்புத்தி உதானவாயு சோத்திரேந்திரியம் சுரு பவிஷயம் பாதேந்திரியம் ஆகவைந்தும் அக்கினி பஞ்சிகிருதி.

வாயுவினிடத்தி லாகாசம் மனது - ஸ்தானங் கண்டம் வாயுவினிடத்தில் வாயுவியானவாயு- ஸ்தானம்- சர்வசரீரம்- வாயுவினிடத்தி லக்கினி தொக்கேந்திரியம் ஸ்தானந்தொக்கு- வாயுவினிடத்தி லப்புபரிசதன்மாத்திரை- வாயுவினிடத்திற் பிருதிவி பாணீந்திரியம் ஸ்தானம்-அஸ்தம்.

இதற்குச்சுலோகம்.

మానసం వ్యానవాయుశ్చ చక్షుస్స్పర్శస్తథైవచ పాదః పంచవిధః ప్రోక్త ఇత్యేతద్వాయుపంచకం॥

இதனதுபொருள்.

இந்தமனது வியானவாயு தொக்கேந்திரியம் பரிசவிஷயம் பாணீந்திரியம் ஆகவிந்தவைந்தும் வாயு பஞ்சிகிருதி.

ஆகாசத்தினிடத்திலாகாசம் ஞானம்ஸ்தானம் புருவமத்தியம்- ஆகாசத்தினிடத்தில் வாயுசமானவாயு ஸ்தானம் நாபி- ஆகாசத்தினிடத்தி லக்கினிசுரோத்திரேந்திரியம் - ஸ்தானஞ்செவி-ஆகாசத்தினிடத்

திலப்புசத்ததன்மாத்திரை - ஆகாசத்தி னிடத்திற் பி
ருதிவிவாகிந்திரியம் - ஸ்தானம்வாக்கு.

இதற்குச் சுலோகம்.

జ్ఞానంసమాన వాయుశ్చ శ్రోత్రంశ బ్దస్తథైవచ।
వాక్చపంచవిధః ప్రోక్తః ఇత్యేతద్వ్యోమపంచకం॥

இதனதுபொருள்.

இந்தஞானம் சமானவாயு சுரோத்திரேந்திரியம் சத்தவிஷயம்வாகிந்திரியம் ஆகவிந்தவைந் தும்ஆகாச பஞ்சிகிருதி.

இந்தவிந்திரியங்களிருக்கிறஸ்தானமான தூலசரீ ரம்பஞ்சிகிருதபஞ்சமகாபூதங்களினாலானது இதற் குச்சம்மதிவசனம்

சுலோகம்

పంచీకృతమహాభూత సంభవంకర్మ సంచితం।
శరీరం సుఖదుఃఖానాం భోగాయతనముచ్యతే॥

இதனதுபொருள்.

பஞ்சிகிருத பஞ்சமகாபூதத்தினின்று முண்டாகி யும் கர்மசஞ்சிதமாயும் சுகதுக்கங்களுக் கிடமாயுமி ருக்கின்றதுதூலசரீரமென்றாசாரிய சுவாமிகளாத்ம போதமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறாரா

திலப்புசத்ததன்மாத்திரை - ஆகாசத்தி னிடத்திற் பி றதிவிவாகிந்திரியம் - ஸ்தானம்வாக்கு.

இதற்குச் சுலோகம்.

జ్ఞానంసమాన వాయుశ్చ శ్రోత్రంశ బ్దస్తథైవచ।
వాక్చపంచ్చవిధః ప్రోక్తః ఇత్యేతద్వ్యోమపంచకం॥

இதனதுபொருள்.

இந்தஞானம் சமானவாயு ச்ரோத்ரேந்திரியம் சத்விஷயம்வாகிந்திரியம் ஆகவிந்தவைந் துமாகாச பஞ்சிகிருதி.

இந்தவிந்திரியங்களிருக்கிறஸ்தானமான தூலசரீரம்பஞ்சிகிருதபஞ்சமகாபூதங்களினாலானது இதற்குச்சம்மதிவசனம்

சுலோகம்

పంచీకృతమహాభూత సంభవంకర్మ సంచితం।
శరీరం సుఖదుఃఖానాం భోగాయతనముచ్యతే॥

இதன்துபொருள்.

பஞ்சிகிருத பஞ்சமகாபூதத்தினின்று முண்டாகியும் கர்மசஞ்சிதமாயும் சுகதுக்கங்களுக் கிடமாயுமிருக்கின்றது தூலசரீரமென் றாசாரிய சுவாமிகளாத்மபோதமென்கிற கிரந்தத்தினிருபித்திருக்கிறரான

ஷம் போனாலுந்தான் போகவேண்டுமே இந்த வைந்
தும் போனாலுந்தான் போகவில்லையே- ஆகையாலி
ந்தவைந்துக்குஞ் சாட்சியாயறிகிறவறிவேதான்.

இப்படியேபசிதாகம் நித்திரைஆலஸ்யம்சங்கமம்
இந்தவைந்தையுமறிந்தவறிவேதான்-தன்னாலறியப்
பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டா தாகை
யாற்சடம்.

இந்தவைந்துந்தானல்ல இந்த வைந்து மக்கினியி
னம்சமாம்- இந்தவைந்தினுடைய ஹானிவிருத்திக
ளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை இந்தவை
ந்துமே தானானு லிந்தவைந்தும்போனாற்றான் போ
கவேண்டுமே இந்த வைந்தும் போனாலுந் தான்
போகவில்லையே ஆகையா லிந்தவைந்துக்குஞ் சாட்
சியாயறிகிறவறிவேதான்.

இப்படியே கிடத்தல் நடத்தல் இருத்தல் ஓடல்த
ந்தல் இந்தவைந்தையுமறிந்த வறிவேதான்-தன்னாலறியப்பட்ட
விந்தவைந்துந் தன்னையறியமாட்டாதா
கையாற்சடம்-இந்தவைந்துந் தானல்ல விந்தவைந்
தும் வாயுவினம்சமாம்-இந்த வைந்தினுடைய ஹா
னிவிருத்திகளினால் வருகிறசுகதுக்கங்கள்தனக்கில்லை
இந்தவைந்துந் தானானு லிந்த வைந்தும் போனாற்
றான் போகவேண்டுமே இந்தவைந்தும் போனாலுந்

தான்போகவில்லையே ஆனபடியினாலிந்தவைந்துக்
குஞ் சாட்சியாயறிகிறவறிவேதான்.
இப்படியேஆசை துவேஷம் பயம்வெட்கம் மோகம்
இவ்வைந்தையுமறிந்த வறிவேதான் தன்னாலறியப்ப
ட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டா தாகையா
ற்சடம். இந்தவைந்துந்தானல்ல விந்தவைந்து மாகா
சத்தினம்சமாம்.

இந்தவைந்தினுடைய ஹானிவிருத்திகளினால்வரு
கிற சுகதுக்கங்கள் தனக்கில்லை - இந்த வைந்துந்தா
னான விந்த வைந்தும் போனாற்றான் போகவேண்டு
மேஇந்தவைந்தும்போனாலுந்தான்போகவில்லையே
ஆனபடியா லிந்த வைந்துக்குஞ் சாட்சியா யறிகிற
வறிவேதான்.

இந்தபிருதிவிபஞ்சகமும் அப்புபஞ்சகமும் அக்
கினிபஞ்சகமும் வாயுபஞ்சகமும் ஆகாச பஞ்சகமு
மாகியவிவ்வைந்து பஞ்சகங்களுங்கூடித்தூலசரீரமா
ச்சுது.

இதைத்தூலசரீரமென்றறிந்தவறிவேதான் தன்னா
லறியப்பட்ட விந்தத் தூலசரீரந்தன்னை யறியமாட்
டாதாகையாற்சடம் இந்தத் தூலசரீரந்தானல்ல விந்
தத்தூலசரீரம்பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினாலா
னது இந்தத்தூலசரீரத்தினுடையஹானிவிருத்திகளி
னால்வருகிறசுகதுக்கங்கள்தனக்கில்லை - இந்தத் தூலசரீ

ரமேதானாலிந்தத்தூலசரீரம் போனாற்றான்போ
கவேண்டுமே இந்தத் தூலசரீரம் போனாலுந்தான்
போகவில்லையேயெப்படித்தான்போகவில்லையென்னி
ற்பூருவத்திற்றன்சரீரத்தோடு மிருந்து பண்ணினக
ருமத்தினாற்றனக்கிந்தச்சரீரம்வந்ததென்றும்இந்தச்
சரீரத்தினாற்பண்ணினகருமத்தினாற்றனக்கினிமேற்ச
ரீரம்வரப்போகிறதென்று மிந்தச் சரீரத்துக்குவில
ட்சணமானதன்னையறிந்தாற்றனக்கினிமேற்சரீரம்வ
ராதென்றுமனுபவமிருக்கின்றபடியாற்பூதபவிஷ்ய
வர்த்தமானகாலத்திரயங்களிலு மிந்தச்சரீரமிருந்தா
லும்போனாலுந்தான் போகவில்லையே ஆனபடியினா
லிந்தவியஷ்டி தூலசரீரந்தானல்ல இந்தவியஷ்டி தூ
லசரீரத்துக்குச் சாட்சியாயறிகிறவறிவேதான் இதற்
குச்சம்மதிவசனம்.

சுலோகம்

స త్వేవాహం జాతునాసంనత్వం నేమేజనాధిప। న
చైవనభవిష్యామస ర్వేవయమతఃపర॥ [౧౯]

இதனது பொருள்.

நானொருக்காலுமில்லாமலிருந்தவனல்ல நீயுமிரா
மலிருந்தவனல்ல-இந்தவிராசாக்களுமிராமலிருந்த
வர்களல்ல நாமெல்லாருமேலில்லாமற்போகிறவர்க
ளுமல்லவென்றுகீதையிற்பகவானிருபித்திருக்கிறார்

சுலோகம்.

ఘటద్రష్టా ఘటాద్భిన్నః సర్వదా న ఘటో యథా ॥
దేహద్రష్టా తథా దేహో నాహమిత్యవధారయ [౨౦]

இதனதுபொருள்.

கடத்தைக்காண்கிறவன் கடத்துக்குவேருய்க்கட மாகாததுபோலத்தேகத்தைக் காண்கிறதானுந்தேக மல்லவென்றறிக- என்ருசாரியசுவாமிகள்வாக்கியவி ருத்தியென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிருரானப டியினுலிதுவேபிரமாணசித்தம்.

இந்தவியஷ்டி தூலசரீரத்துக்குச் சாட்சியானதா னேபிரமாதிபிபிலி காந்தமான சமஷ்டி தூலசரீரங் களிலும் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களென்கிற தூ லபூதங்களிலு மனுசூதமாயிருந்துக்கொண்டுசாட்சி யாயறிகிற படியினு லிந்தச்சமஷ்டி தூலசரீரங்களு க் காரணமான பஞ்சீகிருதபஞ்சமகா பூதங்களென் கிற தூலபூதங்களுந்தானல்ல- எப்படித்தானல்லவெ ன்னிற்றமக்கெதிரேதோற்றுகிறசமஷ்டிவியஷ்டியா த்மகமான தூலசரீரங்களிடத்திலு மிதற்குக்காரண மான பஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களென்கிற தூலபூ தங்களிடத்திலும் அத்தியஸ்தமாய்த்தோற்றுகிறவிசு வன் வியாவகாரிகனும் விராட்டு வைஸ்வானரனுமெ ன்கின்றவையான நாமங்களும்-சாக்கிராவஸ்தையும்-

நேத்திரஸ்தானமும் -யுத்தம்பாகமும் அகாரமாத்தி
ரையும்-ரசோகுணமும்கிரியாசத்தியும்பிரமமூர்த்தி
யும் அன்னமயகோசமும் - ஜீவத்துவமும்மனுஷியத்
துவமும்-நான்கர்ப்பஸ்தனாகப்பிறந்தவன் நான்பால
ன் நான்குமாரன் நான்யுவன் நான்விருத்தன் நான்ஜி
ரணித்துப்போகிறவனென்னுமிச்சட்பாவவிகாரங்க
ளும்சடாதாரமென்கிற நாமங்களும் லக்ஷியத்திரயங்
கமென்கிறநாமங்களும் நான்புருஷன்நான்ஸ்திரீ நபு
ம்ஸகனென்கிறலிங்கத்துவமும்நான்பிராமணன் நான்
க்ஷத்திரியன் நான்வைசியன்-நான்சூத்திரனென்கிற
வர்ணித்துவமும்-நான்றமிழன்-நான்றெலுங்கன்-நா
ன்கர்னடன்-நான்மாராஷ்டகன் நான் குச்சரனென்
கிறபஞ்சத்திராவிடங்களும் - நான்காசிய கோத்திரம்-
நான்பரத்வாசகோத்திரம்-நான்போதாயனசூத்திர
ம்-நான் ஆசிலாயனசூத்திரம்-நான் ஆபஸ்தம்பசூத்
திரம்-நான் காத்தியாயனசூத்திரமென்கிற கோத்திர
சூத்திரங்களும்-நான்பிரமசாரி-நான்கிரகஸ்தன்- நா
னவானப்பிரஸ்தன் நான்- சந்நியாசியென்கிற ஆசிர
மங்களும் நான்கிருஷ்ணன்-நான்ராமன் நான் எல்ல
ம்பட்டன் நான்குட்பாபட்டனென்கிற குறிநாமங்க
ளும்நான்கறுத்தவன்நான்சிவத்தவனென்கிறரூபங்க
ளும் நான்தீக்ஷிதன்-நான்சோமயாகி நான்மஹாவி
ரதயாகி-நான்பௌண்டரீகயாகி-என்கிறசமஸ்கார நா

மங்களும்-நான்மாயாவாதி-நான்தத்துவவாதியென்
கிறமதநாமங்களும்-நான்வாத்தியார்-நான்கர்மடன்
நான்பத்தன்- நான்ஞானி - நான்கலியாணப்பிள்ளை
யென்கிறவாசாரநாமங்களும்-நான்தச்சன்-நான்த
ட்டான்நான்கொல்லன்- நான்குசவன்-நான்அம்பட்
டன்-நான்வண்ணான்-நான்இடையனென்கிறவிருத்தி
நாமங்களும்-நான் கூலிக்காரன்-நான்காஸ்தாரி-நா
ன்மாவுத்தன்-நான்மணிபகாரன்-நான்கணக்கப்பிள்
ளையென்கிறகிரியாநாமங்களுமானமனுடநாமங்களு
ம்-பிர்மாவிஷ்ணுமயேஸ்வரன்சூரியன் நட்சத்திரம்
தேவகந்தருவசித்தசாத்தியகின்னரகிம்புருஷகுய்யக
அப்ஸரவித்தியாதரயக்ஷராக்ஷச பூதப்பிரேதபிசாச
சாகினிடாகினிவேதாளாதிதர்ம்பிர மிருண்மயசிலா
தாருரூபங்களென்கிறதேவநாமத்துவமும்கோஇட்
பஅசுவகார்த்தபசிங்கசார்த்தூலசுவானமார்ச்சாலமர்
க்கடாதி மிருகநாமங்களும்கருடன்மசகமாதிபக்ஷிநா
மங்களும் பன்னகாதி ஊர்வனநாமங்களும்-மச்சகூர்
மாதிநீர்வாழ்வன நாமங்களும் கற்பகம்- மந்தாரம்
பாரிசாதம்-நாளிகேரம்-தாளி- அசுவத்தாதி விருக்ஷ
நாமங்களும்-மகாமேருசித்திரகூடம் திரிகூடம்சத்த
குலபர்வதாதிபர்வதநாமங்களும் - சுவர்க்கமத்தியபா
தாளாதிசதுர்த்தசபுவனங்களும் நவகண்டஞ்சத்ததீ

இதனது பொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தி லாரோபிக்கப்பட்டது சூட்சுமசரீரம். அதின்ஸ்வரூபம்நிரூபிக்கப்படுகின்றது.

அஃதெப்படியென்னில் சத்ததன்மாத்திரைசாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினதுஞானம்- சத்ததன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது சமானவாயு-சத்ததன்மாத்திரைவியஷ்டி சாத்விகாம்சஞ் சுரோத்திரேந்திரியம்- சத்ததன்மாத்திரை விஷயம், சத்ததன்மாத்திரை வியஷ்டி ரசோம்சம்.- வாகிந்திரியம் - இந்தஞானம்சமானவாயு சுரோத்திரியஞ் சத்தவிஷயம், வாகிந்திரியம், இந்தவைந்துஞ் சத்ததன்மாத்திரையைத் தவிரவில்லை.- பரிசதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினதுமனது- பரிசதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற்கூடினது வியானவாயு.- பரிசதன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சந் தொக்கேந்திரியம்.- பரிசதன்மாத்திரை விஷயம்-பரிசதன்மாத்திரை வியஷ்டி-ரசோம்சம்பாணீந்திரியம்-இந்தமனது வியானவாயு தொக்கேந்திரியம் பரிசவிஷயம்பாணீந்திரியம்இந்தவைந்தும்பரிசதன்மாத்திரையைத்தவிரவில்லை.ரூபதன்மாத்திரை சாத்விகாம்சஞ்சமஷ்டியிற் கூடினதுபுத்திரூபதன்மாத்திரைரசோம்சஞ்சமஷ்டியிற்கூடினது உதான

வாயு - ரூபதன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சம் நேத்திரேந்திரியம் ரூபதன்மாத்திரைவிஷயம்-ரூபதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சம் பாதேந்திரியம் இந்தப்புத்தி உதானவாயு நேத்திரேந்திரியம் - ரூபவிஷயம் பாதேந்திரிய மிந்தவைந்தும் ரூபதன்மாத்திரையைத்தவிரவில்லை - ரசதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற்கூடினது சித்தம்.

ரசதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது அபானவாயு-ரசதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சஞ் சிகுவேந்திரியம் ரசதன்மாத்திரை விஷயம்-ரசதன்மாத்திரை வியஷ்டி ரசோம்சங் குய்யேந்திரியம்-இந்தச்சித்தம் அபானவாயு சிகுவேந்திரியம் ரசவிஷயங் குய்யேந்திரியம் இந்தவைந்தும்ரசதன்மாத்திரையைத்தவிரவில்லை - கந்ததன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற்கூடினது அகங்காரம்- கந்ததன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது பிராணவாயு-கந்ததன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சங் கிராணேந்திரியங் - கந்ததன்மாத்திரை விஷயம் கந்ததன்மாத்திரைவியஷ்டி ரசோம்சங் குதேந்திரியம் - இந்த வகங்காரம் பிராணவாயு - கிராணேந்திரியம் - கந்தவிஷயம் - குதேந்திரிய மிந்தவைந்துங் கந்ததன்மாத்திரையைத் தவிரவில்லை - இந்த

வாக்காதி கன்மேந்திரியங்களைந்தும், சத்தாதி விஷயங்களைந்தும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்தும், பிராணாதி வாயுக்களைந்தும், ஞானம் நீங்கலாக மனாதியந்தக்கரணங்களான்குமாக விந்த விருபத்துநாலுங்கூடிச்சூட்சுமசரீரமாச்சு - இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்

పంచప్రాణమనోబుద్ధిదశేంద్రియసమన్వితం। అ
పంచీకృతభూతోత్థసూక్ష్మాంగం భోగసాధనం॥ [௨௩]

இதனதுபொருள்.

பஞ்சப்பிராணனும் மனமும் புத்தியும் ஞானேந்திரியங்களுங் கன்மேந்திரியங்களுஞ் சூட்சுமசரீரமென்றும்பேர். இப்படிஆசாரியசுவாமிகளாத்மபோதமென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிறானபடியினாலிதுவே பிரமாணசித்தம்.

ஆனாலாசாரியசுவாமிகளாத்மபோதமென்கிறகிரந்தத்திற் சூட்சுமசரீரம் பதினேழுதத்துவமென்று நிரூபித்திருக்க, இருபத்துநான்குதத்துவமென்றெப்படிச்சொல்லப்படுமென்றால்- மனதிற்சித்தத்தையும் புத்தியிலகங்காரத்தையுமடக்கிப் பஞ்சவிஷயங்களையுநீக்கிப் பதினேழாகக் கூறினார்-யாமிந்தச்சித்தமகங்காரமிவைகளின் குணம் வெவ்வேறயிருக்கி

ன்றபடியினு லிவ்விரண்டையுஞ் சூட்சுமசரீரத்துக் குக் காரணமான பஞ்சதன்மாத்திரைவிஷயரூபமா சத் தோற்றுகிறபடியினு லிந்த விஷய ரூப மா கத் தோன்றுகிற பஞ்சதன்மாத்திரைகளைத் தவிரச் சூட்சுமசரீர மிராதானபடியினு லிந்த விஷயங்களை ந்தையுமாகமேவமையுங்கூட்டிச் சூட்சுமசரீரமிருபத் துநாலென்று சொன்னது சித்தம்.

இப்படியே தன்னிடத்தி லத்தியஸ்தமாய்த்தோற் றுகிற பஞ்சதன்மாத்திரையினுலானவிந்தச் சூட்சும சரீரந்தானல்ல இந்தச் சூட்சுமசரீரத்தையறிந்தஞா னமேதான் அஃதெப்படியென்னில் வாக்கு, பாணீ பாதம், குய்யம், குதங்களென்கிற கன்மேந்திரியங் களுக்கு வசன - தான - கமன - ஆனந்த - விசாக்கமான விஷயங்களுண்டா யிருந்தாலும் - இந்தச் சுரோத்தி ரோத்திரியஞ் சத்தவிஷயத்தினுல் வாகிந்திரியத்துக் கறிகிறது தன்னுலறியப்பட்ட விந்தவாகிந்திரியந் த ன்னையறியமாட்டாதாகையாற்சடம் - இந்த வாகிந் திரியந்தானல்ல - இவ்வாகிந்திரியஞ் சத்ததன்மாத் திரை வியஷ்டி சாத்விகாம்சத்தினு லானது இதன் ஹானிவிருத்திகளினுல் வருகிற சுகதுக்கங்கடனக்கி ல்லை - இந்த வாகிந்திரியந்தானுனுல் இந்த வாகிந்திரி யம் போனுற்றானும் போகவேணுமே, இந்த வாகிந் திரியம் போனுலும் தானப்படிப் போகவில்லையே

ஆகையாலிந்த வாகிந்திரியத்துக்குச் சாக்ஷியாயறிந்
தசுரோத்திரேந்திரியமேதான் - இப்படியே தொக்
கேந்திரியம் பரிசவிஷயத்தினாற் பாணீந்திரியத்துக்
கறிகிறது - தன்னாலறியப்பட்ட விந்த பாணீந்திரி
யம் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம், ---இந்
தப் பாணீந்திரியந் தானல்ல இந்தப்பாணீந்திரியம்
பரிசதன்மாத்திரை, வியஷ்டி ரசோம்சத்தினாலான
து இந்தப் பாணீந்திரியத்தினுடைய ஹானிவிருத்தி
களினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை - இந்தப்
பாணீந்திரியமே தானானால் இந்தப் பாணீந்திரியம்
போனாற்றான்போகவேண்டுமே இந்தப் பாணீந்திரி
யம்போனாலுந் தான்போகவில்லையே - ஆகையினா
லிப்பாணீந்திரியத்துக்குச் சாக்ஷியாயறிந்த தொக்
கேந்திரியமே தான் இப்படி நேத்திரேந்திரியம் ரூ
பதன்மாத்திரையினாற் பாதேந்திரியத்துக்கறிகிறது.
தன்னாலறியப்பட்ட பாதேந்திரியந் தன்னையறியமா
ட்டாதாகையாற் சடம், ---இந்தப் பாதேந்திரியந்தா
னல்ல - இந்தப் பாதேந்திரியம் ரூபதன்மாத்திரை,
வியஷ்டி, ரசோம்சத்தினாலானது இந்தப் பாதேந்தி
ரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுக
துக்கங்கடனக்கில்லை - இந்தப் பாதேந்திரியமே தா
னானா லிந்தப்பாதேந்திரியம்போனாற்றான்போகவே
ண்டுமே - இந்தப் பாதேந்திரியம் போனாலுந்தான்

போகவில்லையே - ஆனபடியினா லிந்தப்பாதேந்திரியத்துக்குச் சாக்ஷியாயறிந்த நேத்திரேந்திரியமே தான். இப்படியே சிகுவேந்திரியம் ரசவிஷயத்தினாற் குய்யேந்திரியத்தை யறிகிறது-தன்னாலறியப்பட்ட குய்யேந்திரியந் தன்னை யறியமாட்டாதாகை யாற் சடம், --- இந்தக் குய்யேந்திரியந் தானல்ல- இந்தக் குய்யேந்திரியம் ரசதன்மாத்திரை, வியஷ்டி, ரசோம்சத்தினாலானது - இந்தக் குய்யேந்திரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கடனக்கில்லை இந்தக்குய்யேந்திரியமே தானா லிந்தக்குய்யேந்திரியம்போனாற்றான் போகவேண்டுமே - இந்தக் குய்யேந்திரியம் போனாலுந் தான்போகவில்லையே - ஆனபடியினா லிக்குய்யேந்திரியத்துக்குச் சாக்ஷியாயறிந்த சிகுவேந்திரியமே தான் - இப்படியே கிராணேந்திரியங் கந்ததன்மாத்திரையினாற் குதேந்திரியத்தையறிகிறது - தன்னாலறியப்பட்ட குதேந்திரியந்தன்னையறியமாட்டாதாகையாற் சடம்---இந்தக்குதேந்திரியந்தானல்ல - இந்தக் குதேந்திரியங் கந்ததன்மாத்திரை, வியஷ்டி, ரசோம்சத்தினாலானது - இந்தக் குதேந்திரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கடனக்கில்லை-இந்தக்குதேந்திரியமே தானானா லிந்தக் குதேந்திரியம் போனாற்றான் போகவேண்டுமே- இந்தக்

குதேந்திரியம் போனாலுந் தான் போகவில்லையே-
ஆனபடியினாலிந்தக் குதேந்திரியத்துக்குச் சாக்ஷி
யாயிருந்த கிராணேந்திரியமேதான்-இந்தச் சுரோ
த்திரம் தொக்கு-சட்சு-சிகுவா - கிராண - மென்கிற
ஞானேந்திரியங்கள்-சத்த-பரிச- ரூப-ரச - கந்ததன்
மாத்திரைகளினால் - வாக்கு-பாணி-பாதம்- குய்யம்-
குதங்களென்கிற கன்மேந்திரியங்களையறிகிறது-தன்
னாலறியப்பட்ட கன்மேந்திரியங்கள் தானல்ல- இந்
தக் கன்மேந்திரியங்கள் பஞ்சதன்மாத்திரை, விய
ஷ்டி ரசோம்சத்தினாலானது ஆகையா லிந்தக் கன்
மேந்திரியங்களுடைய ஹானிவிருத்திகளினால் வரு
கிற சுகதுக்கங்க டனக்கில்லை - இந்தக் கன்மேந்திரி
யங்களே தானானா லிந்தக்கன்மேந்திரியங்கள் போ
னாற்றான்போகவேண்டுமே - இந்தக்கன்மேந்திரிய
ங்கள் போனாலுந் தான்போகவில்லையே-ஆனபடியி
னா லிக்கன்மேந்திரியங்களுக்குச் சாட்சியா யிருந்த
ஞானேந்திரியங்களேதான் - இப்படியே சுரோத்தி
ரம்-தொக்கு-சட்சு-சிகுவா-கிராணங்களென்கிறஞா
னேந்திரியங்களுக்குச் சத்த - பரிச - ரூப- ரச-கந்த
தன்மாத்திரைகளென்கிற விஷயங்களுண்டாயிருந்
தாலும் அகங்காரம் பிராணவாயுவோடே கூடிக்
கிராணேந்திரியத்தைப் பற்றிக் கந்தமறிகிறது-இப்
பிராணவாயு, கிராணேந்திரியம், கந்ததன்மாத்தி

ளை, இந்த மூன்றையு மறிந்த வகங்காரமேதான்-த ன்னாலறியப்பட்ட விந்தமூன்றுந் தன்னை யறியமா ட்டாதாகையாற்சடம்.---இந்த மூன்றுந் தானல்ல- இந்தமூன்றுஞ் சமஷ்டிரசோம்சத்தினாலும், விய ஷ்டி, சாத்விகாம்சத்தி லானது மனது - இம்மூ ன்றினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகது க்கங்கடனக்கில்லை-இந்த மூன்றுந்தானா விந்தமூ ன்றும்போனாற்றான்போகம்வண்டுமே-இந்த மூன் றும்போனாலுந்தான்போகவில்லையே - ஆகையாவி ந்தமூன்றுக்குஞ் சாட்சியாயறிந்த அகங்காரமேதா ன்-இட்படியேசித்தம், அபானவாயுவோடேகூடிசி குவேந்திரியத்தைப்பற்றி ரசத்தையறிகிறது ஆகை யாவிந்தவபானவாயு - சிகுவேந்திரியம், ரசதன்மா த்திரை-இம்மூன்றையு மறிந்தசித்தமேதான் - தன் னாலறியப்பட்ட இந்த மூன்றுந் தன்னை யறியமாட் டாதாகையாற் சடம் --- இந்த மூன்றுந் தானல்ல இந்த மூன்றும் ரசோம்சசமஷ்டியினாலும் சாத்வி காம்ச வியஷ்டியினாலு மானது - ஆகையா விந்த மூன்றினுடைய ஹானிவிருத்திகளினால்வருகிற சுக துக்கங்க டனக்கில்லை - இந்த மூன்றுமே தானானா விந்த மூன்றும் போனாற்றான் போகவேண்டுமே இந்த மூன்றும்போனாலுந்தான்போகவில்லையேஆ கையாவிந்தமூன்றுக்குஞ்சாட்சியாயறிந்தசித்தமே

தான்-இப்படியேபுத்தி - உதானவாயுவோடே கூடி நேத்திரேந்திரியத்தைப்பற்றி ரூபத்தையறிகிறது- இந்த உதானவாயு நேத்திரேந்திரியம் ரூபதன்மாத்திரை-இந்தமூன்றையுமறிந்தபுத்தியேதான்- தன்னாலறியப்பட்ட விந்தமூன்றுந் தன்னை யறியமாட்டாதாகையாற் சடம்---இந்த மூன்றுந் தானல்ல இந்த மூன்றும் சமஷ்டி, ரசோம்சத்தினாலும் வியஷ்டி, சாத்விகாம்சத்தினாலானது- ஆகையா லிந்த மூன்றினுடைய ஹானிவிருத்திகளினால்வருகிற சுகதுக்கங் கடனக்கில்லை- இந்தமூன்றுமேதானாலிந்தமூன்றும்போனாற்றான் போகவேண்டுமே இந்த மூன்றும் போனாலுந்தான்போகவில்லையே ஆனபடியினாலிந்தமூன்றுக்குஞ்சாட்சியாயறிந்த புத்தியேதான்.

இப்படியே மனது வியானவாயுவுடனே கூடித் தொக்கேந்திரியத்தைப்பற்றி பரிசத்தை யறிகிறது ஆகையாலிந்தவியானவாயு தொக்கேந்திரியம் பரிசவிஷயம்-இந்தமூன்றையு மறிந்தமனமேதான்-தன்னாலறியப்பட்ட இந்தமூன்றுந் தன்னையறியமாட்டாதாகையாற்சடம்.--இந்த மூன்றுந் தானல்ல இந்தமூன்றும் பரிசதன்மாத்திரை - சமஷ்டி, ரசோம்சத்தினாலும் வியஷ்டி, சாத்விகாம்சத்தினாலு மானது ஆகையாலிந்த மூன்றினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை - இந்தமூ

ன்றுமேதானானவிந்தமூன்றும்போனாற்றான் போக வேண்டுமே இந்தமூன்றும் போனாலுந் தான்போ கவில்லையே-ஆகையா லிந்தமூன்றுக்குஞ் சாட்சியா யறிந்த மனமேதான்.

இப்படியே ஞானம் சமானவாயுவுடனேகூடி சு ரோத்திரேந்திரியத்தைப்பற்றி சத்தத்தையறிகிறது ஆகையாலிந்தச்சமானவாயு, சுரோத்திரேந்திரியம், சத்தவிஷயம், இந்தமூன்றையுமறிந்த ஞானமேதா ன்-தன்னா லறியப்பட்ட விந்த மூன்றுந் தன்னையறி யமாட்டாதாகையாற்சடம்,---இந்த மூன்றுந்தானல் ல இந்தமூன்றுஞ் சத்ததன்மாத்திரை-சமஷ்டி, ர சோம்சத்தினாலும் வியஷ்டி, சாத்விகாம்சத்தினாலு மானது ஆகையா லிந்த மூன்றினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை, இந்தமூன்றுமேதானானா லிந்த மூன்றும் போனாற் றான் போகவேண்டுமே-இந்த மூன்றும் போனாலு ந்தான்போகவில்லையே ஆனபடியினா லிந்தமூன்று க்குஞ் சாட்சியாயறிந்த ஞானமேதான்.

இந்தப்பிராணாதி வாயுக்களைந்து, சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்து, சத்தாதிவிஷயங்களைந்து, ஆகப்பதினைந்தையுமறிந்த ஞானம் - மனது- புத்தி-

கமும் - உகாரமாத்திரையும் - சாத்விககுணமும் - இச்சாசத்தியும் - விஷ்ணுமூர்த்தியும் - பிராணமய கோசமும் - மனோமயகோசமும் - விஞ்ஞானமய கோசமும் - நான்வார்த்தைசொல்லுகிறவன் - நான் தாதா - நான்நடக்கிறவன் - நான்சலவிசர்ச்சனம்பண்ணுகிறவன் - நான்மலவிசர்ச்சனம் பண்ணுகிறவன் - நான்ஊமையன் - நான்மொண்டி - நான்முடவன் - நான்பத்தகோஷ்டன் - நான்பண்டகனென்கிற கன்மேந்திரியங்களுடைய கிரியா வத்தியாசங்களும் நான்கேட்கிறவன், நான்பரிசிக்கிறவன், நான்பார்க்கிறவன், நான்ருசியறிகிறவன், நான்வாசனையறிகிறவன், நான்செவிடன், நான்மரத்துப்போயிருக்கிறவன், நான்குருடன் - நான்ருசியறியாதவன், நான் மூக்கிறையனென்கிற ஞானேந்திரியங்களுடைய கிராகாத்தியாசங்களும், நான் சீவிக்கிறவன், நான்சஞ்சரிக்கிறவன், நான் சத்தியுடையவன், நான்வீரியமுடையவன், நான்பசித்தவனென்றும், நான்தாகிச்சவனென்றும் - நான்வாயுவேகனென்றும் - நான் பலமுடையவனென்றும் - நான் அம்பையானசித்தன் - நான் அடயோகி - நான்லயயோகியென்றும்நான்கண்டிறந்துமூடுகிறவன் - நானிருமுகிறவன் - நான் தும்முகிறவன் - நான்கொட்டாவிவிடுகிறவன் - நான் விழுங்குகிறவனென்றும் - நான் வாந்தியண்ணுகிற

வன் - நான்சிரணம்பண்ணிக்கொள்ளுகிறவன் - நான்
எப்பமிடுகிறவ னென்றும்,----இவை முதலாகிய ப
ஞ்சப் பிராணன்களுடைய கிரியாத்தியாசங்களும்
நான்சங்கற்பவர்த்தன், நான்மனேவெகி, நான்போ
கி, நான்மந்திரயோகி, நான்சோகி, நான்ராகி, நா
ன்மோகி, நான்துவேஷி, நான்காமி, நான் சமுசய
முள்ளவனென்றும்- நான்புத்திவந்தன், நான்விவே
கி,நான்மகாபுத்தியுள்ளவன்---நானேகசந்தக்கிராகி-
நான்கர்த்தா---நானிச்சயவந்தன்---நான்விருத்தன்-
நான்பண்டிதன்- நான் லோகாந்தரகாமியென்றும்-
நான்சஞ்சலன்- நான்சபலன்---நான்சிந்தகனென்று
ம்,----நானகங்காரி- நானுக்கிரன்-நான்வீரன் - நான்
சூரன்--- நானபிமானியென்கிற இவை முதலான வந்
தக்கரணங்களுடைய கிராகாத்தியாசங்களும்---உதா
த்தம்-- அநுதாத்தஞ்--ஸ்வரிதங்களென்கிற வேதசுர
ங்களும்-சத்தசுரங்களும் - ராககீதங்களும்-பேரி-மி
ருதங்க-சங்க - பணவ - கோமுகாதிவாத்தியங்களும்-
சதுர்விதபேதசத்தங்களும் - விலாப - பிரலாப-துர்
லாப-புருஷாலாப - காடின்னியாலாப - சோகாதிது
க்கசத்தங்களும் - அஷ்டாதசபாஷைகளும் - இவை
முதலானசத்தங்களுடைய- வத்தியாசங்களும் --- சீத
ளஷ்ணை- மிருது-கடின- தாரதம்மியாதி பரிசத்தினு

டையவத்தியாசங்களும்---நீல-பீத- சுவேத-ரத்தஅரிசனமுதலான-தாரதன்மியாதிரூபத்தினுடைய வத்தியாசங்களும்---உப்பு - புளிப்பு - கைப்பு - தித்திப்பு-துவர்ப்பு முதலான - ரசதார தன்மியமான - ருசியினுடைய வத்தியாசங்களும் --- சுகந்த - துர்க்கந்த-மிஸ்ரகந்த - தாரதன்மியாதி வாசனைகளினுடைய வத்தியாசங்களும் - இந்தச் சூட்சுமப் பிரபஞ்சத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட சத்தசாஸ்திர - தர்க்க சாஸ்திர மீமாம்ச சாஸ்திரங்களும்-சமஷ்டி - வியஷ்டியினுண்டான - அநேக வத்தியாசங்களும் --- இவை முதலான விந்தச் சூட்சுமப் பிரபஞ்சத்தின்பேரிற் றோற்றுகிற சகலவத்தியாசங்களும்,---இதற் காதார மான சூட்சுமப்பிரபஞ்சமும், சுசுவிஷாணவந்தியா புத்திரகளைவிந்த மித்தியாபுருஷின்போலவே காலத்திரயத்திலுந் தன்னிடத்திலில்லை- இந்தவிருபத்து நான்கு தத்துவங்களைக் குறித்துச் சூட்சுமசரீரமென்று சொல்லுவோமென்றால் - இந்தவிருபத்துநான்கு தத்துவங்களும் - விருத்திரூபமாய் வெவ்வேறுநாமங்க ளிருக்கிறபடியினாலும் ஞானம் - சமானவாயு - சுரோத்திரேந்திரியம் - வாகிந்திரியம்-இந்த நான்குவிருத்தியுஞ் சத்தமென் மாத்திரையைத்தவிரவில்லாதபடியினாலும் - மனது - வியானவாயு - தொக்கேந்திரியம் - பாணிந்திரியம் - இந்த

நான்கு விருத்தியும் பரிசதன்மாத்திரையைத் தவிர வில்லாதபடியிருனும் - சித்தம் - அபானவாயு - சிகு வேந்திரியம் - குய்யேந்திரியம் - இந்த நான்கு விரு ருத்தியும் - ரசதன்மாத்திரையைத்தவிரவில்லாதபடி யிருனும் - அகங்காரம் - பிராணவாயு - கிராணேந் திரியம் - குமேந்திரியம் - இந்த நான்கு விருத்தியுங் கந்ததன் மாத்திரையைத் தவிரவில்லாத படியிருனு ம் - இந்தப் பஞ்சதன் மாத்திரைகளைப் பிரத்தியேக மாய்ப் பார்க்குமிடத்தில் அகங்காரதத்துவ மெனகி ற அவஸ்தையி லத்தியஸ்தமாய்த் தன்னிடத்திலெ திராய்த்தோற்றுகிற அபஞ்சிகிருதமானபஞ்சதன்மா த்திரைகளும் - இவைகளுக்குக் காரியமான சூட்சும ப்பிரபஞ்சமும் - இதனிடத்திலத்தியஸ்தமாய்த்தோ ற்றுகிறநாமங்களும் - இதைக்குறித்துவந்த வாபாச ங்களுஞ் - சசவிஷாண வந்தியா புத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன் போலவேகாலத்திரயத்து மந்தன க்கில்லை - இதற்குச்சம்மதிவசனம்.-

சுலோகம்.

పంచభూతమయంవిశ్వంమరీచిజలసన్నిభం। కస్యే
చోభూన్నమస్కారఃయోహమేకోనిరంతరః॥ [౭౮]

சத்தப்பிரகரணம்.

இதனது பொருள்.

பஞ்சபூத ஸ்வரூபமான பிரபஞ்சங்காணற்சலத்தி நக்கொப்பானது - நானேயெங்கும் பரிபூரணமா யிருக்கிறேன், ஆருக்கும் நமஸ்காரம் என்றும்

சுலோகம்,

మనోనబుద్ధిన్న చశరీరమింద్రియంతన్మాత్రభూతా
నినభూతపంచకం। అహంకృతిశ్చాపినచిత్స్వరూపంత
నిరాశమాత్మానముపైతిశాశ్వతం॥ [౨౫]

இதனது பொருள்.

சித்ஸ்வரூபமாயும் - சர்வேஸ்வரனாயும், சாஸ்வதமாயுமிருக்கின்ற- ஆத்மஸ்வரூபத்தை மனதும் புத்தியும், அகங்காரமும், பஞ்சதன்மாத்திரையும், பஞ்சமகாபூதங்களும், சரீரமும் அடையமாட்டாது. என்றும் அவதூதகீதை முதலிய சாஸ்திரங்களில் தத்தாத்திரய யோகீஸ்வரர் முதலிய பெரியோர்கள் சொல்லியிருக்கிறபடியா லிதுவே பிரமாணசித்தம்.

---

சூட்சுமப்பிரகரணஞ்சம்பூரணம்.



ஐந்தாவது

# காரணப்பிரகரணம்.



முற்பிரகரணத்திற் சங்கற்பரூபமான சூட்சுமசரீரத்தையும், அதற்காதாரமான பஞ்சதன்மாத்திரைகளையும், நியதிகளோந்தவைகட் காதாரமான வவித்தையை நியதிகளோதற்பொருட் டதன்மயமான காரணசரீர ஸ்வரூப நிரூபிக்கிறார்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపేస్వాత న్యారోపితంవపుః। కా
రణంతత్స్వరూపంతు తావత్ప్రనిరూప్యతే॥ [௫]

இதனதுபொருள்.

சச்சிதானந்தஸ்வரூபமான தன்னிடத்திலாரோபிக்கப்பட்டது காரணசரீரம் அதினுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது.

காரண சரீரமாவது, பஞ்சதன் மாத்திரைகள் பிர த்தியேகம் - பிரத்தியேகமாய் விபகரித்துப் பார்க்கு மிடத்திற் சசவிஷாணவந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன்போலவே யொன்று மில்லாமற் போனபடியினால் - இது வொன்று மில்லையென்று தோற்றப்பட்டதே காரணசரீரம் - இந்தக் காரணச ரீரத்துக்கு அகங்காரதத்துவ மென்றும்-அவித்தை யென்றும் - தமமென்றும் - தூலசூட்சும சரீரங்களு க்குக்காரணமென்றும்- ஒன்றுந் தெரியவில்லையெ ன்றும்- ஒன்றுங்காணவில்லையென்றும் -ஒன்றுந்தோ ணவில்லையென்றும்- பிராந்தியென்று மிவை முதலா ன பரியாயநாமங்களையுடைய விதுவே காரணசரீர ம்,---இதற்குச்சம்மதிவசனம்.

சுலோகம்.

అనాద్యనిర్వాచ్యతయా కారణోపాధిరుచ్యతే
ఉపాధి త్రితయాదన్యమాత్మానమవధారయేత్ ॥ [౨౮]

இதனதுபொருள்

அநாதியாகியும், அநிர்வாச்சியமாகவு மிருக்கின்ற படியாற் காரணோபாதியென்றுசொல்லப்பட்டது-

இம்மூன்றுபாதிகளுக்கும் அன்னியமாயாத்மாவை யறியவேண்டியது.

என்றுஆசாரியசுவாமிக ளாத்மபோதமென்கிறகிரந்தத்தி னிரூபித்திருக்கிறுரானபடியஞலிதுவே பிரமாணசித்தம்.

தன்னிடத்தி லத்திரியஸ்தமாய்த்தோற்றுகிற விந்தக்காரணசரீரந்தானல்ல - அதெப்படித் தானல்லவென்ருல் ஒன்றுமில்லையென்று தோற்றப்பட்டவிந்தக் காரணசரீரத்துக் கொன்றுமில்லை யென் றறிந்தஞானமேதான் - தன்ஞலறியப்பட்ட விந்தக் காரணசரீரந் தன்னை யறியமாட்டாதாகையாற்சடம்---இந்தக் காரணசரீரந்தானல்ல - இந்தக்காரணசரீரமகதத்துவத்திஞலானது -இந்தக்காரணசரீரத்திஞுடையஞானிவிருத்திகளிஞல் வருகிற சுகதுக்கங்க டனக் கில்லை இந்தக்காரணசரீரமே தாஞஞ லிந்தக்காரணசரீரம் போஞற்ருன் போகவேண்டுமே - இந்தக் காரணசரீரம் போஞலுந்தான் போகவில்லையே - அதெப்படிப்போகவில்லை யென்ருற் சமாதியவஸ்தையிற் காரணசரீரம்போஞலுந் திரும்பவும் விருத்தி வந்தபின்பு சுகமேயிருந்தேனென்று சொல்லுகிருஞனபடியிஞலிந்தக்காரண சரீரந்தானல்ல - இந்தக்காரண சரீரத்துக்குச் சாக்ஷியாயறிகிற ஞானமேதான்.

இந்தக் காரணசரீரத்துக்குச் சாக்ஷியாயறிகிற நா
னே சமஷ்டிகாரணசரீரங்களிலேயும்---அநுசூதமா
யிருந்தறிகிறஞானமேதான் --- தன்னையறியப்பட்ட
விந்தச் சமஷ்டிகாரண சரீரந் தன்னை யறியமாட்டா
தாகையாற்சடம்--- இந்தச்சமஷ்டிகாரணசரீரந்தா
னல்ல, இப்படித் தனக்கெதிராய்த் தோற்றுகிறசம
ஷ்டி, வியஷ்டியான, காரண சரீரத்தின்பேரிலத்தி
யஸ்தமாய்த்தோற்றுகிற பிராஞ்ஞன் - பரமார்த்தி
கன். அவச்சின்னன் - அவ்வியாகிருத னென்கிற அபி
மானித்துவமும் - சுழுத்தியவஸ்தையும் - ஆனந்தம
யகோசமும் - தாமசகுணமும் - ஆத்மானந்த போ
கமும்-ஞானசத்தியும்- ருத்திரமூர்த்தியும்--- இருதய
ஸ்தானமும்---மகாரமாத்திரையும்; நான்போத்துரு
நான்சந்துஷ்டன்-நான்சாத்விகன்--நான்ராசதன்---
நான்றாமசன் - நான்சடன் நானனூர்தன் -- நானஞ்
ஞானி - நான்மூடன் - நான்சுத்தன்- நான்குண்டன்-
நான்மோகி நான்விவேகி - நான்பிருந்தன் --நான்
பாபிஷ்டன்-நான் சோம்பன் - நானொன்றுக்குமா
காதவன் - நானெரிந்து போட்டவன்-- நான் கெட்
டுப்போனவன்-நான்வெறியன்-நான்கையாலாகாத
வனென்கிறபிராந்திஜந்நியாத்தி யாசத்துவமும் -இ
ந்தக்கார ணசரீரத்தைக்குறித்துச் சொல்லப்பட்ட
சத்தசாஸ்திரம்- யோகசாஸ்திரம் வேதாந்தசாஸ்திர

முதலியசாஸ்திரங்களும்,---சமஷ்டி, வியஷ்டி,யெ ன்கிறவத்தியாசங்களும்-இவைமுதலான விந்தக்கா ரணப்பிரபஞ்சத்தின்மேரிற் ரேற்றுகிற சகலவத்தி யாசங்களுஞ்சசவிஷாணவந்தியா புத்திரககளாவிந் தமித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்திலுந்த னக்கில்லை - அதெப்படித்தனக்கில்லையென்று லத ற்குத் திஷ்டாந்தபூர்வகமாகச் சொல்லுகிறேம்.

அதென்னவென்றல் கடத்தைக்குறித்துவந்த க டாபாவங்கடத்தைத்தவிர வெப்படியில்லையோவப் படியே பிரபஞ்சத்தைக்குறித்து வந்த பிரபஞ்சா பாவம் பிரபஞ்சத்தைத்தவிரவில்லை- ஆனபடியினு ன் மகதத்துவத்தின்மேரிலத்தியஸ்தமாய்த் தோற் றுகிற பிராந்திஜந்நியநாமங்களும் - இத்தைக் குறித் துவந்த வாபாசங்களும் - சசவிஷாண வந்தியாபுத் திரககளாவிந்தமித்தியா புருஷன்போலவே காலத் திரயத்திலுந்தனக்கில்லை சித்தம் - இதற்குச்சம்மதி வசனம்.

சுலோகம்.

దేహేంద్రియమనోబుద్ధి ప్రకృతిభ్యోవిలక్షణం। త

ద్వృత్తిసాక్షిణంవింద్యాదాత్మానంరాజవత్సదా॥

குருவாக்கியத்தினாற் றானென்றறிந்து நின்றதே மூல
ப்பிரகிருதி ரகிதமான தன்னுடையஸ்வரூபம்- இத
ற்குத்திஷ்டாந்தம்- ஆறுகடந்து பத்துபேர்போகச்
சே அந்தப் பத்துபேரிற் கணக்காளியான வொரு
வன் மற்ற வொன்பதுபேரையுமெண்ணித் தன்னை
யெண்ணாமற் பத்தாவான் றானாயிருந்துந் தன்னைப்
பத்தாவானென்றறியாமற்போனதே அதிஷ்டானா
ஞ்ஞானமானமூலப்பிரகிருதி ஆப்தவாக்கியத்தினாற்
பத்தாவான் றானென்றறிந்து நின்றதே மூலப்பிர
கிருதிரகிதமான தன்னுடைய ஸ்வரூபம்- இதற்குச்
சம்மதிவசனம்.

ஞானஞ் சுளுவுமாம்-பளுவுமாம் - அதெப்படி
யென்னில் தானென்றறிந்த அறிவு தானெனச்சுளு,
அதுதானன்றென்கிறமறதியே பளுவென்றுலோக
குருவாயிருக்கப்பட்ட வேதவியாசபகவான்ஸ்ரீராம
ஸ்தவராசமென்கிறகிரந்தத்தினிரூபித்திருக்கிறபடி
யினாலும் அறிந்தேனென்கிறநினைப்பும்அறியேனெ
ன்கிறநினைப்பும் இவ்விரண்டு மின்றி யிருக்கிறதே-
நிரதிசயானந்தமென்று அவதூதகீதையில் - தத்தா
த்திரயயோகீஸ்வரர் நிரூபித்திருக்கிற படியினாலும்
ஆசாரியர்-சீடன் - இவர்களுடைய பிரச்சினோத்தர
ம் - ஆலம்பழத்தைக்கொண்டுவா, ஸ்வாமி - இதோ

கொண்டுவந்தேன் - அதைப்பிள - பிளந்தேன், அதி
லென்ன கண்டாய், ஒன்றுங் காணவில்லை பரமாணு
க்களைக்கண்டேன், அப்பரமாணுக்களி லொன்றை
ப்பிள-பிளந்தேன்-அதி லென்னகண்டாய் ஒன்றுங்
காணவில்லை - இப்படிக்கொத்த அணுவான, வினா
யில் இலை பணை- விழுது - பொந்துகள் - முதலான
விகாரங்களோடு கூடிய ஆலமரமானது எப்படி
அடங்கியிருந்ததோ அப்படியே யுன்னிடத்தினும
ரூபபிரபஞ்சமு மடங்கியிருக்கின்றது.

என்று சாந்தோக்கிய வுபநிடதத்திற் சொல்லியி
ருக்கிறபடியினாலும் இதுவே பிரமாணசித்தம்.

---

மகாகாரணப்பிரகரணஞ்

சம்பூரணம்.



ஏழாவது

# நிசானந்தானுபூதிப் பிரகரணம்.



முற்பிரகரணத்தில் வித்தியாரூபமான மஹாகாரணசரீரத்தை நியதிகளாந் திலைகட்காதாரமான சச்சிதானந்தவொருமையினுள்ள நிரதிசயானந்த மனுபவமாம்பொருட்டதற்கங்கமான நிசானந்தானுபூதிப்பிரகரணநிரூபிக்கிறார்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపేణాత్మామృతసరస్వతిః స
తీముక్తిర్జ్ఞానోత్థితికాంతత్స్వరూపన్నిరూప్యతే॥ [౭-౧]

இதனது பொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மா வென்றும் அமிர்தசாகரத்தில் நித்தியசாஸ்வதமான முத்தியிருக்

கின்றது- அதனுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப் படுகிறது.

அஃதாவது - மூலப்பிரகிருதிரகிதமான தன்னுடையஸ்வரூப வர்ணநீயநாமங்க ளெப்படி யென்னில்,சத்தியநிர்ஷேதோன்றுகிறபடியினாற் சித்தாச்சு- சித்தேசுயமாயிருக்கிறபடியாற்சத்தாச்சு - இதற்கிரண்டாம்வஸ்துவில்லாதபடியினா லானந்தமாச்சு-ஆகச்சே, சச்சிதானந்தஸ்வரூபமாய், அகண்டானந்தஸ்வரூபமாய்ப் பரிபூரணானந்த ஸ்வரூபமாய்நித்தியானந்த ஸ்வரூபமாய், நிர்விசேஷானந்த ஸ்வரூபமாய்,நிரூப, நிருபத்திரவ, நின்மல,நிரவயவ, நிரந்தர, நித்திய, நிராகார, நிபத்த,நிஷ்கர்ம, நிர்ச்சங்க,நிர்விகாரஸ்வரூபமாய், நிர்க்குணநிஷ்கிரிய - நிர்விகற்ப, நிரஞ்சன நிர்லக்ஷிய, நிராலம்ப, நிரதிசயானந்தஸ்வரூபமாய், நிரீச, நிர்லேப, நிர்வாண,நிச்சிந்திய,நிர்வசன-நிரூபானந்தஸ்வரூபமாய்---நிர்வேத்திய நிர்ச்சல - நிசேஷ- நிர்ச்சத்த - நிர்ச்சீவ-நிர்ச்சலானந்தஸ்வரூபமாய் - நிர்ப்பின்ன- நிர்ப்போத- நிர்நாம - நிர்வியாச்சிய - நிர்ப்பாவ- நிஷ்பிரபஞ்சஸ்வரூபமாய்-அச்சேத்திய-அக்கிலேத்திய- அசேஷிய-அதாகிய-அக்கிராகிய- ஆதியந்தரகிதானந்தாவரூபமாய்-அக்ஷர-அமல-அப்பிரமேய-அநாசிரயானந்தகந்தஸ்வரூபமாய் அநாதார-அமிர்த அவிமி

ர்க்கிய-அநாமய-அதிரிசில-அத்துவிதானந்தஸ்வ
ரூபமாய் அபாகிய-அந்நிய-அபாசிய-அநிர்வாச்சி
ய-அநிந்திரிய-அபோத்திய-அசூனிய-அக்குரோத
அபரோக்ஷானந்தஸ்வரூபமாய்-இவைமுதலான த
ன் ஸ்வரூபத்தினுடைய வர்ணநீய நாமங்களாம்.—
இதற்குச் சம்மதிவசனம்.

## சுலோகம்.

నిర్గుణో నిష్క్రియో నిత్యో నిర్వికల్పో నిరంజ
నః॥ నిర్వికారో నిరాకారో నిత్యముక్తో౽స్మి నిర్మలః॥ [౩౪

## இதனது பொருள்.

ஒருகுணமுமில்லாதவனாய், ஒருகர்மமுமில்லாத
வனாய், ஒரு விகற்பமுமில்லாதவனாய், ஒருமானமு
மில்லாதவனாய், ஒரு விகாரமுமில்லாதவனாய், ஒரு
ரூபங்களு மில்லாதவனாய், நித்தியமுத்தனா யிருக்கி
றேன்.

இப்படி ஆசாரியசுவாமிக ளாத்மபோதமென்கி
ற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறா ரானபடியினாலும்
வேதசாஸ்திரங்களிற் சொல்லி யிருக்கிற படியினா
லும் இதுவேபிரமாணசித்தம்.

இந்தஸ்வரூபத்தினுடைய வர்ணநீயநாமங்கள் பிர பஞ்சத்தைக்குறித்துவந்ததேயல்லாமல்வேறல்ல- அதெப்படியென்னில் அசத்தைக்குறித்துச் சத்தென்றும் - சடத்தைக்குறித்துச் சித்தென்றும், துக்கத்தைக்குறித்தானந்தமென்றும் - சகுணத்தைக்குறித்து நிர்க்குணமென்றும் - ஆவரணத்தைக்குறித்து நிராவரணமென்றும்- சாகரத்தைக்குறித்து நிராகாரமென்றும் - விஷயானந்தத்தைக்குறித்து நிர்விஷயானந்தமென்றும்- பேதத்தைக்குறித்து அபேதமென்றும் - பரோக்ஷத்தைக்குறித்து அபரோக்ஷமென்றும் - தொய்தத்தைக் குறித்து அத்தொய்தமென்றும் - விகாரத்தைக்குறித்து நிர்விகாரமென்றும்-அவலம்பலத்தைக்குறித்து நிராலம்பமென்றும் சங்கத்தைக்குறித்து நிர்ச்சங்கமென்றும்- அப்பிரகாசத்தைக்குறித்துப் பிரகாசமென்றும் - கண்டத்தைக்குறித்து அகண்டாகாரமென்றும் - நாமத்தைக்குறித்து நிர்நாமமென்றும்-சூனியத்தைக்குறித்துப்பூரணமென்றும்-வாச்சியத்தைக்குறித்து அநிர்வாச்சியமென்றும்-சத்தத்தைக்குறித்து நிர்ச்சத்தமென்றும்-அஞ்சனத்தைக்குறித்து நிரஞ்சனமென்றும், வைத்தியத்தைக்குறித்து நிர்வேத்தியமென்றும், சலனத்தைக்குறித்து நிர்ச்சலனமென்றும், மிரீதத்தைக்குறித்து அமிர்தமென்றும், ஆதியந்தசகி

த்தைக்குறித்து ஆதியந்தரகிதமென்றும்- பிரபஞ்சத்தைக்குறித்து நிஷ்பிரபஞ்சமென்றும் - சித்தநிரோதத்தைக்குறித்து யோகமென்றும்- லக்ஷியத்தைக்குறித்து நிர்லக்ஷியமென்றும், பெயர்களாம்.---பின்னுஞ் சர்வம்பிரமமென்றுஞ் சர்வஞ்சூனியமென்றும், இவைமுதலான தன்ஸ்வரூபத்தினுடைய வர்ணனீயநாமங்கள் பிரபஞ்சத்தைக்குறித்து அத்தியாசமாய்த்தோற்றிற்றேயல்லாமற் சுதாயிருந்தநாமங்கள் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷனைப்போலவே காலத்திரயத்திலுந் தனக்கில்லை- ஆனபடியினாற் பேதாபேதரகிதமாய்ப்புண்ணியாபுண்ணியரகிதமாய்த்தொய்தாத்தொய்தரகிதமாய்ப்பாவாபாவரகிதமாய்ஞானஞ்ஞானரகிதமாய்காரியகாரணரகிதமாய் மாயாமோகரகிதமாய் பந்தமோக்ஷரகிதமாய் சுகதுக்கரகிதமாய் காமியாகாமியரகிதமாய் கற்பியாகற்பியரகிதமாய் ஜநந மரணரகிதமாய் விருத்திக்ஷயரகிதமாய் உதயாஸ்தமனரகிதமாய் திவாராத்திரிரகிதமாய்- இவைமுதலாயிருக்கப்பட்ட தொந்தரகிதமாய் அநிர்வசனீயமுமாயிருக்கப்பட்ட தன்னுடையஸ்வரூபத்தில் அதிஷ்டானஞ்ஞானமென்கிற ஆவரணமானமூலப்பிரகிருதியும் விக்ஷேபகாரணமானமகத்தத்துவம், அகங்காரதத்துவம், பஞ்சதன்மாத்திரை, சூட்சுமதூலாதிப்பி

ரபஞ்சமெப்படித் தோற்றுகிறதென்றால் திஷ்டா
ந்தபூர்வகமாய் நிரூபிக்கிறோம்.

அந்தத் திஷ்டாந்தமென்னவென்றால் மூலப்பிர
கிருதியென்கிற மித்தியாபுருஷனிடத்தில் அகங்கார
தத்துவமென்கிற இல்லாதசித்திரக்கோற் கையிற்பி
டித்துக்கொண்டு பஞ்சதன்மாத்திரையென்கிற இல்
லாத பஞ்சவன்னங்களினாற் றூலசூட்சமமென்கிற
பொய்யானசித்திரத்தைச் சூனியமென்கிறவாகாச
த்திலெழுதினாற்போலவிருக்கிறதென்று வசிட்டப
கவான் வாசிட்டமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்
கிறானபடியினாலிந்த துஷ்ணீம்பூதனாயிருக்கப்ப
ட்டதன்னுடையஸ்வரூபத்தில் அதிஷ்டானஞ்ஞான
மானஆவரணமென்கிறமூலப்பிரகிருதியும் விக்ஷே
பகாரணமான மகதத்துவ மகங்காரதத்துவமும் ப
ஞ்சதன்மாத்திரை சூட்சமதூலப்பிரபஞ்சமும்-சா
க்கிரசொர்ப்பனசுழுத்தி துரியாவத்தைகளும் - விசு
வதைசத பிரபஞ்ஞபிரத்தியக்சைதன்னியமும்வி
ராட்டு-இரணியகர்ப்ப-அவ்வியாகிருத சருவசாக்ஷி
த்துவமும் ராசசதாமசசத்துவமான சுத்தசத்துவ
குணங்களும் யுத்தபரியுத்த ஆனந்த ஆத்மானந்த
போகங்களும் சிற்சத்தி பராசத்தி ஆதிசத்தி இச்சா
சத்தி கிரியாசத்திகளும் பிரமா-விஷ்ணு-ருத்திரன்-

மஹேஸ்வர சதாசிவமூர்த்திகளும் நேத்திரம்கண்டம் - இருதயம் - மூர்த்தன்னியஸ்தானங்களும்-அகார-உகார - மகார - பிந்துமாத்திரைகளும் - இத்தைக்குறித்து வந்த அத்தியாசநாமங்களும்,--இத்தைக்குறித்துச்சொல்லப்பட்ட சாஸ்திரங்களும் இத்தைக்குறித்துவந்தஆபாசங்களும்-இத்தைக்குறித்துவந்த ஸ்வரூபவர்ன நீயநாமங்களும்,--- இந்தஸ்வரூபவர்னநீயமாய்ப்பிரதியக்ஷிக்கிற மகாவாக்கியங்களும்,இந்தமகாவாக்கியங்களையுபதேசம்பண்ணிக்கொண்ட சிஷர்களும்,--இந்தச் சிஷரைக் குறித்துபதேசம்பண்ணினசற்குருக்களும்,இந்தச்சற்குருக்களுடையவுபதேசங்களும்,இந்த வுபதேசத்தினால்வந்த சிரவண, மநந, நிதித்தியாச, சமாதி, சாக்ஷாத்கார பரோக்ஷ, அபரோக்ஷங்களும்,சீவன்முத்திவிதேகமுத்திகளும் - பந்தமோக்ஷங்களும் பிராரத்த ஆகாமியசஞ்சிதங்களும் ஆருடன் அநாருடர்களும்-பூதபவுஷியவர்த்தமானகாலங்களும்- கிரியானுவித்தம்-சத்தானுவித்தம் நிருவிகற்ப சமாதிகளும் கர்மம் பத்தி வைராக்கியம்-யோகத்தியானங்களும்சாம்பவிமுத்திரை-கேசரிமுத்திரை - அமனஸ்கமுத்திரை-மவுனமுத்திரைகளும் இந்தப்பிரபஞ்சம் அஞ்ஞானத்தினாற் றோற்றிற்றென்றும் ஞானத்தினால்நாசமாய்ப்போச்சுதென்றும் யோகத்தினாற்றன்னைத்தா

ன் பார்க்கவேண்டுமென்றும் பிரகாசமாகக்கண்டே
னென்றும்ஞானத்தினாற் றன்னைத்தானறியவேண்டு
மென்றும் இப்போ தறிந்துகொண்டே னென்றும்
இவைமுதலான சகலசங்கற்பப் பிராந்திகளும்- மரு
மரீசிகையினிடத்திற்சலங் காலத்திரயத்திலு மெய்ப்
படியில்லையோசுத்தியினிடத்தில் ரசிதங்காலத்திரய
த்திலுமெய்ப்படியில்லையோ ரச்சுவினிடத்திற் சர்ப்
பங்காலத்திரயத்திலுமெய்ப்படியில்லையோ அப்படி
யே அதிஷ்டானஞ்ஞானமென்கிற மூலப்பிரகிருதி
முதலான சகலபிராந்திகளும் நிசானந்தானுபூதிஸ்
வரூபமாய் தூஷ்ணீம்பூதனானதன்னிடத்திற் சசவி
ஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷ
ன்போலவே காலத்திரயத்திலுமில்லை இதற்குச்சம்
மதிவசனம்.

சுலோகம்.

సర్వశూన్యంమనశ్శూన్యంసత్యాసత్యంనవిద్యతే।
స్వభావభావితంప్రోక్తంశాస్త్రసంపత్తిపూర్వకం [౩౮]

இதனதுபொருள்.

சாஸ்திரசம்பத்திபூர்வகமாக ஸ்வரூபத்தைப்-பா

சுலோகம்.

ప్రత్యస్తమితభేదంయత్సత్తామాత్రమగోచరం।వచ
సామాత్మసంవేద్యంతజ్జ్ఞానంబ్రహ్మసంజ్ఞితం॥ [౪౨]

இதனதுபொருள்.

பேதமிறந்ததாகியும் சத்தாமாத்திரமாகியும்வா
க்குக்ககோசரமாகியும் தன்னாலறியத்தக்கதாகியுமி
ருக்கின்றதெதுவோ அந்தஞானமே பிரமமெனப்
பெயரையுடையதென்றும்.

சுலோகம்.

విభేదజనకేజ్ఞానే నాశమాత్యంతికంగతే। ఆత్మనో
బ్రహ్మణోభేదమసంతంకఃకరిష్యతి॥ [౪౩

இதனதுபொருள்.

பேதத்தையுண்டுபண்ணுகிற வஞ்ஞானமானது
முழுது நாசமடைந்தால் ஆத்மாவுக்கும் பிரமத்து
க்குமில்லாதபேதத்தை யெவன்செய்வான் என்றும்
விஷ்ணுபுராணத்தில் வியாசபகவான் னிரூபித்திருக்கி
றபடியினாலும் இதுவேபிரமாணசித்தம்.

நிசானந்தானுபூதிப்பிரகரணஞ் சம்பூரணம்.

---

சத்தப்பிரகரணம் முற்றிற்று.